# சத்தியத்துக்குக் கட்டுப்பட்டாள்...

சு. சமுத்திரம்

கங்கை புத்தக நிலையம்



# சத்தியத்துக்குக் கட்டுப்பட்டால்...

சு. சமுத்திரம்



கங்கை புத்தக நிலையம்

13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை-600 017

# முன்னுரை

ஜி. லட்சுமிநாராயணன் M. A., B.L.,
(தேசிய முழக்கம்—கரிகாலன்)

'சத்தியத்துக்குக் கட்டுப்பட்டால்...' என்ற தலைப்புடன் அச்சிடப்பட்ட தாள்களை அடியேனின் கைகள் பெற்றபோது அதிர்ச்சி அடைந்தேன்—உடலெங்கும் புதுமை வெள்ளம் பரவிப் பாய்ந்தால் பெறும் ஒரு இன்ப அதிர்ச்சி.

நெடுநாளைய நண்பர் திரு. தர்மலிங்கம், நீண்டதொரு இடைவெளிக்குப் பிறகு பல இடங்களில் தோண்டித் துருவி என்னைத் தேடிக் கண்டுபிடித்து என் கைகளில் அச்சுத்தாள் களைத் திணித்தபோது நான அடைந்த இன்பம் இவ்வுலகை நான் கையில் பெற்றது போலிருந்தது. இனிய முகத்துடன் என் எதிரில் இருந்த நண்பர் எனக்கு இமயமெனத் தோன்றினார்.

அலுவலகச் சிக்கல்கள், அன்றாடத் தொழிற் பிரச்னைகள், இவற்றிலே சிக்குண்டு இதயத்தை எங்கோ மறந்து, உணர்வு களை ஆழப் புதைத்துவிட்டு, சமுதாயத்திலே இன்று இயந்திர மாய் இரு கைகளும் பிணைக்கப்பட்ட சந்தர்ப்ப சூழ்நிலைக் கைதியாய் இருந்த எனக்கு அவர் விடுதலை அளித்தார்.

கூற்றுகளை வடித்துக் குவலயத்திற்குத் தர வேண்டிய நீங்கள் குறிப்பாணைகளை எழுதிக் கூலிக்கு உழைப்பதோ என்று கண்களாலே கேட்டு கூண்டுக் கதவுகளைத் திறந்து விட்டார்.

சுத்தக் காற்றை சுவாசித்து சுதந்திரமாக வெளி உலகைக் காண வந்த என் இதயத்திலே உணர்ச்சிப் பெருக்காக ஓடிவந்த வரிகளை இங்கே வடிக்கின்றேன்.

சத்தியம் என்றால் என்ன என்று ஆராயும் காலம் இது. 'சத்தியமாகச் சொல்கிறேன்' என்றால், 'உண்மையாகச் சொல்கிறேன்' என்று பதிவாகிறது. சத்தியம் என்பது வெறும் உண்மை மட்டும்தானா? ஆழ்கடலின் முத்தை மூழ்கி எடுப்பது போன்று சத்தியத்தின் பொருளை ஆய்ந்து, அனுபவித்து அறிஞர்தம் துணைகொண்டுதான் சத்தியத்தின் பொருளை நாம் அறிய முடியும். என்றாலும் நானறிந்த வரையில் சத்தியம் என்பது ஒரு உயர் நெறி! ஒப்பற்ற ஒரு வழி! பழுதில்லாதொரு பண்பு! காசினியினை மேம்படுத்தும் கலாச்சாரம்!

நட்பு இறவாதது—இது ஒரு நெறி. நண்பர் தர்மலிங்கம் நட்பை மறவாது, தன்னை வருத்திக்கொண்டு, முப்பதாண்டு களுக்கு முன்னே பார்த்த என்னை, தேடிக் கண்டுபிடித்தது சத்தியத்திற்கு சாவில்லை என்பதைத்தானே பறைசாற்றுகிறது.

கண்டவுடன் என் கைகளில் திணித்த கதைத் தொகுப்போ இன்னொரு நண்பர் திரு. சமுத்திரத்தின் சிந்தனைக் கடலில் தோன்றிய ஒளிமுத்துக்கள்— இப்பொழுது சொல்லுங்கள் நட்பு நெறியும் ஒரு சத்தியந்தானே!

நண்பர் தர்மலிங்கத்தைப் போன்றே தளராத உழைப் பினால் இன்று தமிழர் உள்ளங்களிலே கொலுவிருப்பவர். கல்லூரி நாட்களிலிருந்தே நாங்கள் இணைந்திருந்தோம்.

சமுத்திரம் தடைகளைத் தாண்டி வந்தவரல்ல—தகர்த் தெறிந்து வந்தவர்—சவால்களைச் சந்தித்து—சதிகளை சவக் குழியிலிட்டு முன்னேறியவர். சமுத்திரத்திலே ஆர்ப்பரிக்கும் அலைகளும் உண்டு—அழகிய முத்தும் உண்டு—எரிமலை முகட்டுகளும் உண்டு—எழில் கொஞ்சும் பவழப் பாறைகளும் உண்டு.

சமுத்திரத்தின் படைப்புகளிலே இவை அத்தனையும் உண்டு. வாய்மையைப் போற்றி வெஞ்சமர் புரியும் இந்தப் பேனா வீரன் எந்தச் சூழ்நிலையிலும் வளைந்து கொடுத்த தில்லை. சத்தியத்தைக் கட்டுப்பாடாக வாழ்வில் இலட்சிய மாகக் கொண்டவர். சமுதாயத்திலுள்ள சதிகாரர்களைச் சாம்ப லாக்கி சூதாடிகளைக் கழுவிலேற்றிடும் வரை சமர் புரிவேன், சத்தியத்திற்குக் கட்டுப்படுவேன் என்று சூளுரைக்கும் இளைஞர்.

'சத்தியத்துக்குக் கட்டுப்பட்டால்' என்ற தலைப்பைப் பார்த் ததும் அச்சுறுத்துகிறாரோ என்று பயந்தேன். இன்றைய உலகில் சத்தியம் துன்பத்தைத் தருகிறது! சோதனைக் குள்ளாக்குகிறது! உண்மை பல நேரங்களில் புதைக்கப்பட்டு ஆர்ப்பாட்டங்களே மிஞ்சும் காலமிது. 'உண்மை' ஓரிருவர் அறிந்த சொல்—ஊழல் உலகிலுள்ளோர் அத்தனைபேரும் ஜெபிக்கும் மந்திரம். சிந்தையிலே ஊழல், செயலிலே ஊழல், வாழ்விலே ஊழல்—ஏன் வையகம் முழுவதையுமே ஊழல் சேற்றிலே அமுக்கி, மனித இனத்தையே மரணக் குழியிலே போட்டு மூடும் மாபாதகம் பெருகி வருகிறது. இந்த கோர முடி வினின்றும் சமுதாயம் விடுபட வேண்டுமானால் சத்தியத் திற்கு நாம் கட்டுப்பட்டால் போதும்.

சத்தியத்துக்குக் கட்டுப்படுவது கடினம்தான். அண்ணல் காந்தி அடிகளும் தனது வாழ்க்கைச் சரிதத்தை 'சத்திய சோதனை' என்றே அழைத்தார். சத்தியம் சோதிக்கும். ஆனால் முடிவில் சாதிக்கும். வெற்றி வாகை சூடும்போது பட்ட துன்பமெல்லாம் பறந்துபோகும். இமாலயச் சாதனை ஒன்றைப் புரிந்துவிட்ட பெருமை, இன்பமே சூழ்ந்திருந்து இந் நிலவுலகே சுவர்க்கமாகும் மேன்நிலை-இத்தனையும் தோன்றும்.

இன்றையச் சமுதாயத்தின் சீரழிவிற்கு பல காரணங்கள் உண்டு—ஆனால் எளிதில் தெரியாத ஆலகால விஷமாகப்

பரவி நிற்பது—அடுத்தவரை அடக்கியாள வேண்டுமென்ற வெறி, அராஜகத்திற்கு அஸ்திவாரமிட்டு அநீதிச் சுவர் எழுப்பி அநியாய சாம்ராஜ்யத்தை உருவாக்குகிறது. குடும்பம், அரசியல், சமூகம், வணிகம் அத்தனைக்கும் இது பொருந்தும்.

'ஆளுமை உணர்வு' எத்தனை கொடிய நஞ்சை கிடுக்கிப் பிடியில் அடக்குவதுபோல் இரண்டே சொற்களில் வெளிக் கொணர்ந்துவிட்டார் சமுத்திரம். புற்றிலிருந்த பாம்பை பலர் காணக் காட்டிவிட்டார். மனித சமுதாயம் இந்த ஆளுமை உணர்விலிருந்து விடுபட்டால்தான் அமைதியும் ஆனந்தமும் பெற முடியும்.

இரணகளரிகளிலிருந்து, இரத்தச் சேற்றிலிருந்து கரையேற ஒரே வழிதான்—சத்தியத்திற்குக் கட்டுப்படுவது.

சத்தியத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமானால் மனதில் தூய்மை வேண்டும்—தணிகாசலத்தைப்போல. ஆனால் தணிகாசலத்திடம தூய்மை இருந்ததே தவிர துணிவு இல்லை. அதனால்தான் சோதனை! நமக்கு இரண்டும் வேண்டும்.

சமுத்திரம் இலட்சியத்திற்காக எழுத்தைத் தொட்டவர். எளிய நடையிலே ஏற்றமிகு கருத்துக்களை எடுத்துச் சொல் கிறார். தேசியம் வேரூன்ற வேண்டும்—தேமதுரத் தமிழ் பட்டி தொட்டியெல்லாம் பரவ வேண்டும் என்று வாதிடுபவர்.

தேசிய அரசு 1947-ல் ஏற்பட்டதாலேதான் முதன் முறை யாக தமிழ் கட்டாய பாடமாகக் கல்விக்கூடங்களிலே வந்தது. தமிழ் நாட்டு மாணவன் தமிழ் படிக்காமலேயே தாய்மொழியைத் தூக்கியெறிந்துவிட்டு பட்டம் பெற முடியும் என்ற அவல நிலையைப் போக்கியவர் திரு. ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார். தமிழ்த் தலைநகரில் பொறுப்பேற்ற முதல் தேசிய முதலமைச்சர். அன்னைத் தமிழ் அரியணையிலேறியது கர்ம வீரரின் காலம். பட்டிதொட்டிகளிலே பாமரர்கள், பாட்டாளிகளின் மத்தியிலே

தமிழிலே சங்கநாதம் செய்தவர் சத்தியமூர்த்தி. இவர்களின் காலடிச் சுவடுகளை கண்ணில் ஒற்றி கடமையாற்றும் சமுத்திரத்தை இளைஞர் சமுதாயம் சத்தியத்திற்குக் கட்டுப்பட்ட செந்தமிழர் கூட்டம் என்றும் ஏற்கும்—பாராட்டும்.

இதே நேரத்தில் விளக்கிற்கு தூண்டுகோலாக பல நல்ல படைப்புகளை தமிழ் மக்களுக்குத் தந்து, சீரிய எண்ணங்களை வரிகளிலே வடித்துத் தரும், எண்ணற்ற எழுத்தாளர்களை ஊக்குவித்து வாழ்வளிக்கும் வானதி திருநாவுக்கரசு அவர் களைப்பற்றி நான் எண்ணாமல் இருக்க முடியாது.

இந்து தியாலஜிகல் பள்ளியின் ஒன்பதாவது வகுப்பு மாண வனாக இருந்தபோது தம்பு செட்டித் தெருவில் இருந்தேன். மாலை நேரங்களில் தெருவில் விளையாடுவது உண்டு. ஒரு நாள் மூன்றாவது வீட்டிலிருந்த ஒருவர் அழைத்தார். 'தம்பி பள்ளியில் படிக்கும் நீ எழுத்தாளனாகலாமே' என்றார். அந்தக் காலகட்டத்தில் வை.கோவிந்தனின் 'அணில்' பள்ளி மாணவர் களின் சொத்தாக இருந்தது. 'எனக்கு எழுத வராதுங்க' என்றேன். 'நிச்சயம் வரும்—முயற்சி செய்—நாளை வந்து பார்' என்றார். காளிதாசனின் நாவில் அன்னை எழுதியவுடன் காளி தாசன் கவிமேகமானான் என்பதுபோல் மறுநாளே எழுத வேண்டும் என்ற ஆசை வந்தது. இவ்வளவிற்கு நான் தமிழில் முப்பதுக்கும் குறைவாக மதிப்பெண் பெறுபவன்.

> ''டேய், நான் தேன் சொட்டச் சொட்ட ஒரு கதை எழுதியிருக்கேன்—படிக்கிறேன் கேளுடா''—இது ஒரு நண்பன்.
>
> ''வேண்டாம்டா—வீடெல்லாம் எறும்பு வந்திடும்—வா வீதிக்குப் போவோம்—அங்கே படி''

இதுதான் என் கன்னிப் படைப்பு—கண்ணுற்ற அவர் 'தம்பி ஜோராக இருக்கிறது—'ஜில் ஜில்' பத்திரிகையில் வரும் பார்''

என்று சொல்லி ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றைப் பரிசளித்தார். 'ஜில் ஜில்' பத்திரிகையில் ஓவியர் ரெஸாக்கின் படத்துடன் அட்டைப் படத்திலே இந்தத் துணுக்கு பிரசுரமானது. பிரசுரித் தவர் ஜில்ஜில் திருநாவுக்கரசு—இன்றைய வானதி திருநாவுக் கரசு.

இன்றைக்கு நான் மீண்டும் எழுத முயலுகிறேன் என்றால், சில ஆண்டுகள் முன்பு வரை எழுதினேன் என்றால் என் இரத்தத்திலே, சிந்தையிலே வானதியார் தந்த எழுச்சி ஊக்கம் தான் காரணம் நண்பரை சந்தித்ததிலே துவக்கி வழிகாட்டி வானதியாரை நினைப்பதிலேயே இதை முடிக்கிறேன்.

தந்தையின் அடிச்சுவட்டில் தனயனும் ஈடுபட்டு இந் நாவலை வெளியிடும் கங்கை பதிப்பக அதிபர் திரு. இராம நாதன் அவர்களைப் பாராட்டுகிறேன்.

சமுத்திரத்தின் கதைகளைப் படிப்பது மட்டும் போதாது' சமுதாயக் கொடுமைகளைச் சாடிட, அலைகடலின் அலை களாய் ஆர்ப்பரித்து எழுங்கள். ஏய்ப்பர்களையும் மேய்ப்பர் களையும் எரித்து சாம்பலாக்கும் எரிமலைகளாய் குமுறி எழுங்கள்.

'பாதகம் செய்தோரைக் கண்டால் பயங் கொள்ளலாகாது—மோதி மிதித்திடுவோம் அவர்கள் முகத்தில் உமிழ்ந்திடுவோம்' என்று அமரகவி நமக்காகவே பாடினான்.

வீறு கொண்டு எழுங்கள்—புதிய விடுதலைப் போரைத் துவக்குங்கள்! ஆனால் சத்தியத்திற்குக் கட்டுப்பட்டு!

அன்பன்

**ஜி. இலட்சுமிநாராயணன்**
(தேசிய முழக்கம்—கரிகாலன்)

# சத்தியத்துக்குக் கட்டுப்பட்டால்..

## 1

மேற்கே தெரிந்த அந்திமச் சூரியன் பானுமதிக்கும் செல்வத்திற்கும், வேறு வேறு விதமாகத் தெரிந்தது. வெள்ளைத் தட்டில் வைக்கப்பட்ட பீட்ரூட் தோசைபோல் அவளுக்கும், ஆகாய வெளியை கண்களால் செதுக்கிய அவனுக்கு அது ஸ்படிக லிங்க உருவமாகவும் தோன்றியது. கைகளில் மண்ணைப் பிசைந்தபடி இருந்த செல்வம், அந்தக் கதிரவனையே மேல்நோக்கிப் பார்த்தான். அந்த ஆகாய லிங்க வடிவில் சூரியன் குங்குமப் பொட்டாய் அவனுக்குத் தோன்றியது.

எதிர் திசை கடலோரம் ஜோடி ஜோடிகளாய் பிரிந்த காதலர் கூட்டம் பாடி பாடிகளாய் ஒன்றிக் கிடந்தன. சற்று தொலைவான மணல் மேட்டில் சின்னஞ்சிறு ஆட்டுக்குட்டி ஒன்றை நான்கு சொறி நாய்கள் வட்டமாய்ச் சூழ்ந்து கொண்டு, அதை நெருக்கிக்கொண்டு இருந்தன. காதுகளை நிமிர்த்தி, வால்களை விறைப்பாக்கி வாய்களை அகலப் படுத்திய நாய் பட்டாளத்தின் மையமாய் நின்ற வெள்ளைப் புள்ளிமான் போன்ற ஆட்டுக்குட்டியின் கூக்குரலும், நாய்களின் குரைச்சலும், கடலோர கள்ள நாயக-நாயகிகளுக்குப் பொதுவாகக் கேட்கவில்லை. கேட்ட ஒருசில ஜோடிகள், ஓல ஒலியும், உயிர் தின்னி ஒலியும் இரண்டறக் கலந்த

இடத்தைத் திரும்பிப் பார்த்துவிட்டு, தங்கள் ஸ்வீட்— நத்திங் உரையாடலுக்கு அவை இடையூறாக இருப்பது போல், கடலோரம் பார்த்து, தங்கள் மேனிகளை நகர்த்திக் கொண்டார்கள்.

செல்வம் வீறிட்டு எழுந்தான். அவன் கரத்தை கீழே இருந்தபடியே செல்லமாக இழுத்த பானு, அவன் பார்வை பட்ட இடத்தில் நடந்துகொண்டிருந்த விபரீத சம்பவத்தைக் கண்டு, "அய்யயோ" என்று கத்தியபடியே, அவன் கையை விடுவித்தபோது, விடுபட்டவன் ஒரே ஓட்டமாய் ஓடினான். காலை இடறிய கல் ஒன்றை எடுத்துக்கொண்டே மூச்சைப் பிடித்தபடி, முன் நெஞ்சை நிமிர்த்தி, நாய்ப்பட்டாளத்தின் மீது எறிந்தான். அவனைக்கூட குரைத்துப் பார்த்த நாய் கள், இறுதியில், ஆட்டுக்குட்டியைக் கறுவியபடியே பார்த்த வண்ணம், ஓட்டமெடுத்தன. செல்வம் திரும்பி நடக்கப் போனான். இதற்குள் 'மே மே' என்றபடி அந்த ஆட்டுக் குட்டி அவனையும், தொலைவில் நாக்குகளை தொங்கப் போட்டுக்கொண்டிருந்த நாய்களையும் மாறி மாறிப் பார்த்தது. அவன் அதன் உயிர் அச்ச உணர்வுகளைப் புரிந்து கொண்டவன்போல் அவன் நடக்காமல் நின்றபோது, எங்கிருந்தோ ஓடிவந்த தாய் ஆடு, தன் குட்டியை வயிற் றுக்குள் அடைக்கலமாக்கி, ஏதோ நடந்திருக்கிறது என் பதைப் புரிந்ததுபோல் தலையை நிமிர்த்தி சுற்றுப்புறத்தை நோட்டம் விட்டது.

செல்வம், தன்னையறியாமலே, அந்த வாயில்லா ஜீவன் கள் பக்கம் போனான். திடீரென்று இருபது வருடத்திற்கு முன்பு கிராமத்தில் தன்னை படிப்பில் ஜெயிக்க முடியாத சில பெரிய இடத்துப் பையன்கள், அவனை வாயால் திட்டி, கையால் குதறப்போனதும், ஊர்ப் பெரியவர் ஒருவர் அவர் களைத் துரத்தியதும், விஷயத்தைக் கேள்விப்பட்டு வந்த அம்மா, அவனைத் தன் வயிற்றோடு ஒட்டிப்பிடித்து, தலை யைக் கோதி விட்டதும் நினைவுக்கு வந்தது. ஆட்டில்

அம்மாவையும், குட்டியில் தன்னையும் ஐக்கியப்படுத்திக் கொண்டிருந்தவன் தோளில் பட்ட வளைக்கரத்தை நிமிர்த்தியபடியே, அவற்றைப் பார்த்துக் கொண்டிருந்தான். பானு படபடப்பில் கேட்டாள்.

''நாயுங்கள நல்லா துரத்திபிட்டிங்களா, பழைய படியும் வரப்போகுதுங்க. இங்கேயே உட்காருவோமா?''

உட்கார்ந்தார்கள்.

மீண்டும் மண் கொள்ளப்போன அவன் கையை, அவள் பிடித்துக்கொண்டாள். மஞ்சள் நிறப் புடவை மங்கலப் புடவைபோல் தோன்ற, சிவப்பு கரங்களில் உராய்ந்த தங்கக் காப்புகள் முத்து மேடுகளோடு குலுங்க, அவன் இடையில் கைக்கோர்த்தபடியே, பானு கடலைப் பார்த்தாள். இந்தச் சமயத்தில்தான் வாங்குவார்கள் என்பதுபோல், கடலை கொண்டு வந்த விடலைப் பையனை கண்களால் துரத்தினாள். பிறகு அவனை உசுப்பினாள்.

''போவோமா? அப்பா காத்திருப்பார்.''

''எனக்கு பயமா இருக்கு பானு!''

''வெண்ணெய் திரளும்போது தாழியை உடைக்கிறீங்களே!''

''இன்னொரு நாளைக்குப் பார்த்துக்கலாம்!''

''என்ன டியர்... உளறுறீங்க, சொல்றது சினிமாவுக்குப் பொருந்தும். டிராமாவுக்குப் பொருந்தும். பட் இதுக்குப் பொருந்துமா? ஞாபகம் இருக்கட்டும். இன்னைக்கு நடக்கப் போறது பாதிக் கல்யாணம்...''

''நீ பாதியை நினைக்கிறே! நான் மீதியை நினைக்கிறேன். எனக்கு பயமா இருக்கு பானு!''

''அப்படின்னா ஒன்னு செய்யலாம்... அதோ, அந்த படகு பக்கமாப் போவோம். என் புடவையை நீங்க கட்டிக்கலாம். ஒங்க வேட்டியை நான் கட்டிக்கிறேன்.''

"சட்டையையும், ஜாக்கெட்டையும் மாற்றிக்கணுமா... அதையும் சொல்லிடு."

பானு வாய்விட்டு சிரித்து, மனம் விட்டுப் பூரித்தாள். அவனோ அனிச்சையாக ஜோக்கடித்தவன்போல், அவள் சிரிப்பில் தன் சிரிப்பை சிந்தவிடாமல், சீரியசாக சொன்னான்:

"ப்ளீஸ்... நான் சொல்றதைக் கேளு பானு! எனக்கு என்னமோ இன்னைக்கு மனசே சரியில்ல. இன்னொரு நாளைக்கு..."

"இன்றைக்கு முடிந்தாகணும்; இன்னொரு நாளைக்கு என்றால், இனிமேல் அது கல்யாணமாகத்தான் இருக்கணும். எழுந்திருங்க, போயும் போயும் இன்னைக்குப் பார்த்து குட்டாம்பட்டி வேட்டியைக் கட்டிட்டு வந்திருக்கீங்க பாருங்க.. அசல் சந்நியாசி மாதிரி இருக்குது. சரி புறப்படுங்க."

"வேண்டாம் பானு!"

"என்னங்க நீங்க? ஆனானப்பட்ட அப்பாவே சம்மதிச்சுட்டார். ஆறு மாதமாய் யோசிக்க டயம் கேட்டவரு. 'சரிம்மா, பையனைக் கூட்டிவாம்மா. பார்த்துட்டு முடிவு சொல்றே'ன்னு சொல்லிட்டார். நீங்க என் திட்டத்துக்கே முடிவு கட்டுறீங்களே."

"எனக்குக் கூச்சமா இருக்குது."

"இது எனக்கு வரவேண்டியது."

"வெட்கம் வேற, கூச்சம் வேற, நல்லது நடக்கும்போது பெண்களுக்கு வெட்கம் வரும். இல்லன்னா அவள் பெண்ணில்ல! நல்லது நடக்கும்போது ஆணுக்குக் கூச்சம் வரணும். இல்லன்னா அவன் ஆணில்ல."

"சுவாமிகளே! உங்க தத்துவத்தை, போய்கிட்டே பேசலாமா? எழுந்திருங்க."

''ஒன் வீட்லே, நான் சொத்துக்கு ஆசைப்பட்டு வரதா நினைக்கப் போறாங்களோன்னு எனக்கு ஒரு மாதிரி இருக்கு...''

''இதுக்கு பேர்தான் தாழ்வு மனப்பான்மை என்கிறது.''

''தப்பு, தாழ்வு மனப்பான்மை இல்லை. சுயமரியாதை உணர்வு.''

''அளவுக்கு மீறிய சுயமரியாதை, ஒருவித தாழ்வு மனப் போக்குதான்.''

''சரி அப்படியே இருக்கட்டும். இன்னொரு நாளைக்குப் பார்த்துக்கலாம்.''

''சொல்றதை நல்லா கேளுங்க டியர். இன்னொரு நாளைக்குன்னா அது என்னை இன்னொருவருடன் நீங்க மணவறையில் பார்க்கிறதாய்தான் இருக்கும். அதை என்னால் நினைத்துக்கூடப் பார்க்க முடியல. ஒவ்வொரு தற்கொலைக்கும் பின்னணியாய் பல கொலைகாரங்க இருப்பாங்க. ஓ...கே...யு...கேன்...கோ...என் பிரச்சனைக்கு முடிவு கிடைக்கலன்னா, வாழ்க்கைக்காவது முடிவு வரட்டும்.''

பானு எழுகிறாள், அவனின் நீட்டிய கரத்தை முரட்டுத் தனமாய் தட்டிவிட்டபடி. சிறிது தூரம் நடந்து, கண்களை இமைகளாலும், முகத்தை கரங்களாலும் மூடியபடி நின்றாள். செல்வம் படபடத்து எழுந்து, அவள் கையை பிரிக்கப்போனபோது, அவள் உள்ளங்கை விரல் கண்ணீரால் அலம்பப்பட்டது போலிருந்தது.

''என்ன பானு! பைத்தியம்மாதிரி...''

''ஆமாம்! நான் பைத்தியமேதான். இந்தப் பைத்தியத்தை, அதன் போக்கிலேயே விடுங்க. யூ கேன் கோ!''

''பானு...''

"பின்ன என்ன ஸார்! மூணு வருஷத்திற்கு முன்னாடியே இதை நீங்க யோசித்திருக்கணும். சின்ன வயசில இருந்து ஒன்னா பழகுன என் மாமா பையன், என் பின்னாலயே சுற்றிக்கிட்டு இருந்தாலும், அவன்மேல பாசம் வருதே தவிர, ஆசை வர்ல! ஒங்கமேலேகூட எடுத்த எடுப்பிலேயே எனக்கு எதுவும் வர்ல!

"உங்க மறந்துபோற நினைவுக்காக நம் சந்திப்பின் துவக்கத்தை நான் சொல்றேன். அப்புறம் முடிவையோ அல்லது முடிவு கட்டுறதையோ நீங்க சொல்லுங்க. ஒங்க கம்பெனி, என் காலேஜ் பக்கத்துலேயே இருக்கது என் தப்பில்ல. அங்கே, ஒரு அட்டெஸ்டேஷனுக்காகவும், டிராமா ஸ்கிரிப்டை டைப் அடிக்கவும் நான் வந்ததுதான் தப்பு. பத்து பக்கம் டைப் அடித்த உங்களுக்கு நான் பத்து ரூபாயை நீட்டியபோது, என்னை கோபத்தோடு முறைச்சதையும், நான் உடனே கூட ஐந்து ரூபாயை நீட்டியதும், 'நீங்க என்றைக்கும் உதவிக்குப் பிச்சை போடாதிங்க' என்று சொல்லி, ரூபாயை திருப்பிக் கொடுத்திங்க, அதனால் தானோ என்னவோ, அதுல வந்த காதலையும் திருப்பி எரியுறிங்க.

"ஒங்களைவிட ஒங்களோட மனப்போக்கும், நல்லதோ கெட்டதோ...உங்களுக்குன்னு இருக்கிற பிரின்ஸ்பிள்களும், எனக்கு பிடிச்சுப்போச்சு! படிப்படியா உங்களைக் காதலிக்கிறது தெரியாமலே காதலிச்சேன். அப்பா மாமா பையனை ஃபிக்ஸ் பண்ணப் போனபோதுதான், ஒங்கமேல உயிரையே நான் வச்சிக்கிட்டு இருக்கிறது எனக்கு புரிஞ்சுது. ஓடோடி வந்து ஒங்ககிட்டேயே நான் முறையிட்டேன். அப்போவாவது நீங்க எனக்கு புத்திமதி சொல்லியிருக்கலாம்! நான்தான் உங்களிடம் வலியப் பேசினேன் என்கிறதை மறக்கலே! நான்தான் உங்களுக்குக் காதல் நிர்பந்தம் கொடுத்தேன் என்கிறதையும் நான் நினைக்காமல் இல்ல. அதேசமயம் உங்களுக்கு என்மேல் காதல் இல்லங்கறதை அப்போதே சொல்லியிருக்கலாம்.

செல்வம் குழைந்தான்:

"ஒன்மேல எனக்கு இருக்கிற காதல் ஒரு பிரச்சனைக் குரிய விவகாரம் இல்ல! நீ சொல்லிட்டே... நான் சொல்லல! அவ்வளவுதான் விஷயம்; உயிரை அதன் வெளிப்பாடுலதான் பார்க்க முடியும்; தனித்துப் பார்க்க முடியாது. அதுமாதிரி நீ இல்லாமல் என்னைத் தனித்துப் பார்க்கமுடியாது. அப்படி ஒரு நிலைமை ஏற்பட்டால், உயிரை... அதை விடுறவனால எப்படிப் பார்க்க முடியாதோ...அப்படி என்னை என்னையே பார்க்க முடியாது. தாயில்லாமல் தனித்து ஹாஸ்டல்ல படித்த எனக்கு, தாய் மாதிரி வாஞ்சை காட்டியவள் நீ! ஒன்மேல எனக்குக் காதல் இல்லங்கறது...என்மேல எனக்கு உயிர் இல்லை என்கிறது மாதிரி. உனக்கோ நான் உறவில் ஒரு கூறு... உனக்கு அப்பா இருக்கார். அண்ணன் இருக்கார். சொந்த பந்தம் இருக்குது. ஆனால் எனக்கு என் உறவின் முழுக்கூறே நீதான். நீ இல்லாமல் ஒருவேளை நான் வாழலாம்! ஆனால் அந்த வாழ்க்கை சுமையாய் இருக்குமேதவிர சுவையாய் இருக்காது பானு..."

செல்வத்தின் குரல் தழுதழுத்தது. அவன் உடம்பெல்லாம் ஆடியது. விழப்போகிறவன்போல் துடித்த அவன் கரங்களை அவள் பிடித்துக்கொண்டாள். கண்ணீர் கரங்களால் அவன் கண்களைத் துடைத்துவிட்டாள். அவ்வப்போது மனதுக்குள் எட்டிப் பார்த்த சந்தேகம் ஒரேயடியாய் தேகத்தை விட்டும், தேகத்துடன் நீக்கமற நிறைந்த மனதை விட்டும் போனது போன்ற திருப்தி; செல்லச் சிணுங்கலோடு—பொய்க் கோபத்தோடு, ஆள் காட்டி விரலால், அவன் நெற்றிப்பொட்டை அடித்தபடியே கேட்டாள்.

"ஒவ்வொருவரும் மனதால் தீர்மானிக்கப்படுறது கிடையாது. செய்கையால்தான் நிர்ணயிக்கப்படுறாங்க. காதல் பூஜைக்குத் தயாராகும்போது, அதன் மூலவரே கரடியானால் எப்படி..."

''நான் அதைத் தள்ளிவைக்கச் சொல்றனே தவிர, தடை போடச் சொல்லலியே!''

''ஒரு பிரச்சனைக்கு தீர்வு... அதை எதிர்நோக்குவதில் தான் இருக்குது. அதிலிருந்து ஓடுறதுலயோ... தள்ளிப் போறதுலயோ இல்லன்னு சொல்ற நீங்க, இப்போ தள்ளிப் போடுறது. ஓடுறதைவிட மோசமானது! நீங்க வீட்டுக்கு வரதை தள்ளி வைக்கிறது மூலம் என்னை தள்ளி வைக்கிற தாய்தான் அர்த்தம் பண்ண முடியும்.

''நான் சொத்துக்கு ஆசைப்படுகிறதாய்...!

''சொத்து சொத்து—மண்ணாங்கட்டி சொத்து... இது உங்களோட சொத்தை விவாதம் சார்! இதே புடவையோடு ஒங்க பின்னால வாறேன்; கோயிலிற்குப் போவோமா, ரிஜிஸ்டர் ஆபீஸிற்கு போவோமா, இல்லன்னா...குட்டாம் பட்டியில் ஒங்க சித்திகிட்டே போவோமா! எனக்கு இப்பவே முடிவு தெரியணும்! ஏன் யோசிக்கிறீங்க.''

''நீ நினைக்கிற மாதிரி விஷயம் சிம்பிள் இல்ல பானு!''

''இப்படி நெனச்சுதான் பலர், சிம்பிள் விஷயத்தை, காம்ளிகேட் செய்துடுறாங்க. வீட்ல ஒங்களைக் கடித்தா தின்னப்போறாங்க? ஒங்ககிட்டே சில கேள்விகள் கேட்கப் போறாங்க.' வீட்டுக்கு வார மாப்பிள்ளை, நல்ல பையன் தான்னு உறுதிபடுத்த நினைக்கிறாங்க. அதுக்கு, அவங்களுக்கு உரிமை உண்டு. அதை நிறைவேத்துற கடமை ஒங்களுக்கு. சரி. இன்னும் ஒங்க மனசு மாறல்லன்னா, நான் இங்கே நிற்கிறதுல அர்த்தமில்ல! அப்பா பங்சுவாலிட்டிக்கு மதிப்பு கொடுக்கிறவர். நிச்சயித்த நேரம் போய் கால்மணி நேரம் ஆகுது. அப்புறம் ஒங்க இஷ்டம். சரி நான் போகட்டுமா!''

''அவள் கேள்விக்குப் பதிலை வாயால் சொல்ல முடியாதவன்போல் செல்வம் மெள்ள நகர்கிறான். அவள் கரங்கள் இரண்டையும் கூம்பாய் எடுத்து கண்களில் ஒற்றிக்

கொண்டபின், தலைகவிழ்ந்து கடலை நோக்கி நடக்கிறான். இதை சற்றும் எதிர்பாராத அவள் தொப்பென்று மணலில் உட்கார்ந்தாள். குறுகி வைத்த கால்களில், முகத்தைப் புதைத்து, பிடறியில் கை பின்னியபடியே, உயிரற்றவள் போல் கிடந்தாள். சிறிது தூரம் நடந்த செல்வம், திரும்பிப் பார்த்தான். அவனால் தாளமுடியவில்லை. ஒரே பாய்ச்சலில் ஓடிவந்து, அவளின் அருகே வேக வேகமாய் உட்கார்ந்து, அவள் முகத்தை "பானு...பானு" என்று சொன்னபடியே தொடப்போனான். அவளோ, அவன் கையை பலவந்தமாய் விலக்கினாள்.

அவனை நேருக்கு நேராய் பார்த்தாள். "நீங்கள் ஒரு ஆண் மகனா?" என்றுகூட கேட்கப்போனாள். ஆனால் நிர்மலமான முகங்காட்டி, அப்பாவிக் குழந்தைபோல், மோகனமாய், கேள்விக்குறியாகிய அவனைப் பார்த்ததும், அவளால் கேட்கப்போனதைக் கேட்க முடியவில்லை. ஆனாலும் அழுத்தம் திருத்தமாகக் கேட்டாள்.

"நீங்க யார்? நான் யார்? என்னைத் தொடாதீங்க... என் தற்கொலைக்கு யாரும் காரணமில்லன்னுதான் எழுதப் போறேன். சாகிறதே சாகிறாள்...எதுக்காக லட்டர் எழுதி வச்சுட்டு சாகணுமுன்னு நினைக்கிறீங்களா... என் தற்கொலையை, கொலையாய் நெனச்சு போலீஸ் உங்களுக்கு தொல்லை கொடுக்கப்படாது பாருங்க, அதுக்காகத்தான். நீங்க போகலாம்!"

"நானும் அதைத்தான் சொல்ல வந்தேன். எழுந்திரு போகலாம்! ஒன்னைத்தான் பானு, நான் உன்னோட வாறேன் எழுந்திரு! ஒன்னைத்தான்...ஒன்னோடு தற்கொலை செய்ய வாறேன்னு சொல்ல... ஒன் வீட்டுக்கு வாறேன்னு சொல்றேன்!"

இரண்டு கரங்களையும், பக்கவாட்டில் சிறகுகள்போல் மடித்து வைத்த வண்ணத்துப் பூச்சிபோல் கிடந்த பானு மெள்ள மெள்ள முகத்தை மெல்ல மெல்ல தூக்கினாள்.

கலங்கிய கண்ணிமைக்குள் கிடந்த நீலக் கருமணிகள், அங்குமிங்கும் அரைவட்டமடித்தன. விழிகள், உதடுகள் போல் துடித்தன. செக்க சிவந்த மேனி உயரமாகிக்கொண்டிருந்தது. நெற்றி முனைகளில் படர்ந்த மோதிர நெளிவு முடி கற்றைகளை, அனிச்சையாய் தடவியபடியே, அவனையே நிதர்சனமாய் பார்த்தாள். பிறகு அவன் கழுத்தில் கரங்களை சங்கிலி வளையமாக்கியபடியே ''பழையபடியும் முருங்கை மரத்தில் ஏறமாட்டீங்களே'' என்றாள்.

அவன், அவள் முதுகைத் தட்டிக் கொடுத்தபடியே சொன்னான்.

''நான் வாறேன். நீ எனக்கு முன்கூட்டியே சொல்லாமல், இப்போ சொன்னதாலதான் என்னால நிலைப்படுத்த முடியல!''

''அரசியல் சதிக்கும், கொலை, கொள்ளைக்கும்தான் முன்கூட்டியே நோட்டீஸ் கொடுக்க வேணும். உண்மைக்கு எதுக்கு நோட்டீஸ்?''

''உண்மைக்கில்ல. உண்மையை நம்ப வைக்கிறதுக்கு. சூரியன்கூட, காலையில சேவலை கூவவைத்துத்தான், படுக்கையில் இருந்து எழுந்திருக்கிறான்.''

''தப்பு! சூரியன் உதிக்கப் போறதாலதான், சேவல் கூவுது. சேவல் கூவுறதனால சூரியன் உதிக்கல! என்னை நீங்க மனதார விரும்புறதாலதான், என்னோடு வீட்டுக்கு வாறீங்க. வீட்டுக்கு வாரதால விரும்பல!''

''ஒன்கிட்டே பேசி ஜெயிக்க முடியுமோ?''

''காதல் ஊடல்ல தோற்கிறவங்கதான் ஜெயிக்கிறதாய் அர்த்தமாம்! உம்... புறப்படுங்க.''

"ஆனால் ஒரு கன்டிஷன். என்கிட்டே ஒங்க அப்பா, உன் ஜாதி எதுன்னு கேட்டால் என்னால ஒங்க ஜாதின்னு சொல்ல முடியாது. உண்மையான பொருளை உண்மையான வழியில்தான் அடையனும்."

"அய்யய்யோ...இது நீங்க வீட்டுக்கு வராமல் இருக்கறத விட மோசம்."

"அதனாலதான் வரலேன்னேன்!"

"பழையபடி ஒங்க புத்தியைக் காட்டுறீங்க, பாருங்க... என்ன டியர், நாம் ஜாதிகளை அங்கீகரிக்கலை; அதனாலேயே அது இல்லனு ஆயிடாது. அப்பாகிட்ட நீங்க நம்ம ஜாதின்னு சொல்லியிருக்கேன்."

"தர்மர் அஸ்வத்தமா செத்துட்டார்ன்னு சொன்ன மாதிரி..."

"தப்பு! அவர் பொய்க்கு உண்மை முலாம் பூசினார். நான் உண்மைக்கு பொய் முலாம் போட்டுப் பார்த்தேன்! உலகத்துல நம்ம ஜாதி என்கிற மனித ஜாதியைத் தவிர, எந்த ஜாதியும் கிடையாது. இந்த உண்மையை பொய்யாச் சொன்னேன். நீங்களும் சொல்லணும் அவ்வளவுதான்..."

"ஸாரிம்மா..."

"சரி, ஒரு காம்ரமைஸ்... நீங்களா எதுவும் சொல்ல வேண்டாம்! அப்பா இதைப்பற்றி பேசும்போது நீங்க மௌனமாய் இருக்கணும். என்ன சொல்றீங்க? ஏன் பேசாமல் இருக்கீங்க..."

"மௌனம் மூலம் பேசுறேன். சம்மதமுன்னு சொல்லாமல் சொல்றேன். ஏய்... ஏய்... இது பப்ளிக் பிளேஸ்... கழுத்தை விடு!"

இருவரும் சாலையை நோக்கி நடந்தார்கள். அவன் வேட்டியில் படிந்த மண் துகள்களை அவள் தட்டிவிட்டாள். பஸ் நிலையத்தை நோக்கி நடக்கப் போனவனை, அவள்

கைப்பிடித்தாள், அவர்களுக்காகவே தவமிருப்பதுபோல் நின்ற ஆட்டோவில் ஏறிக்கொண்டார்கள். பானு ஆணை யிட்டாள்.

''எங்கள்ல யாரும் ஜம்ப் பண்ணமுடியாதபடி,ஸ்பீடாய் போங்க!'' செல்வம் அவளின் உட்பொருளை உணர்ந்தது போல் சிரித்தபடி பேசினான்.

''அதுக்காக ஆட்டோ ஜம்ப் பண்ணிடப்படாது. பார்த்து ஓட்டுங்க.''

ஆட்டோ டிரைவர் பார்த்து ஓட்டினார். ஒருத்தருக்கு ஒருத்தர் என்று பிறக்கவில்லையானாலும், இறக்கத் தயாராய் இருப்பவர்கள்போல தோன்றிய அந்த இளம் ஜோடியை பார்த்துத்தான் ஓட்டினார். பல்வேறு ஜோடி களை அனுபவத்தால் கண்டுணர்ந்த அந்த டிரைவர், ஒரு நிஜ ஜோடியைப் பார்த்த திருப்தியில் நிமிர்ந்து ஓட்டினார்.

## 2

அசோக மரங்களும், தூங்குமூஞ்சி மரங்களும் நிறைந்த புல்வெளியின் நடுநாயகமான பங்களா. அதன் வரப்பு போலிருந்த குரோட்டன்ஸ் செடிகளை வேலையாள் ஒருவர் அழகுபட சிகையலங்காரம் செய்துகொண்டிருந்தார். டிரைவர், காரை கழுவிக்கொண்டிருந்தார். ஆட்டோவில் பானுவோடு இறங்கியவனைப் பார்த்ததும், இவர்களுக்கெல் லாம் தங்கள் இனத்தவனைப் பார்த்தது போன்ற திருப்தி, அல்லது அதிருப்தி. ஆனாலும் அவனின் கம்பீரமான தோற்றத்தையும் பங்களாவையும், பகட்டான காரையும் பார்த்து மயங்தவன்போல் நடந்த செல்வத்தைப் பார்த்த கண்களோடு, அவர்கள் தங்களுக்குள்ளே கண்ணடித்துக்

கொண்டார்கள். சற்று தொலைவில் துணிகளை துவைத்துக் கொண்டிருநத முத்தம்மா அந்த ஜோடி உள்ளே போனதும், ''காதலுக்குக் கண்ணில்லை என்கிறது சரிதான்'' என்றாள்.

உடனே தோட்டக்காரர் ''கண்ணில்லாட்டிலும் மூளை இருக்குற மாதிரி தெரியுது.'' என்றார். முத்தம்மா அதை அங்கீகரிப்பவள்போல பேசினாள். நாற்பது வயதுக்காரி. உழைப்பு உளியால் செதுக்கப்பட்ட காமாட்சி அம்மன் சிலை போன்ற மேனி, மின்னல்போல் வெட்டும் கருப்பு உதடு களால், சிவப்பு வார்த்தைகளைப் பேசினாள்.

''காதலுக்கு, கண்களைவிட மனசுதான் காரணம். இன்னைக்கு நாட்ல வரதட்சணை கொடுமைன்னு பேசு றாங்க. இது நம்மை மாதிரி ஏழைகள்கிட்டே இல்லாத பிரச்சனை. பெரிய இடத்துப் பிரச்னைக. சின்ன இடத்துல போட்டுட்டு, சின்ன இடத்து பிரச்சனையை, சில்லரைப் பிரச்சனையாய் நினைக்கிற காலம் இது. இதை எதுக்கு சொல்ல வந்தேன்னா, நாட்ல படிச்ச பெண்கள், தன்னை விட எல்லா வகையிலிம் உயர்ந்தவனை புருஷனாய் கேட்கிறாங்க. இது கிடைக்கலன்னா, வரதட்சணை கொடுமையாம். இவள்கள் ஏன் வசதியில்லாத அதே சமயம் நல்ல பையன்களை கல்யாணம் பண்ணப்படாது! ஏதோ அம்மா பானு செய்து காட்டிருக்கு. அந்தப் பையன் பார்க் கறதுக்கு அன்னக்காவடி, பரதேசி மாதிரி இருந்தாலும், எவ்வளவு அழுத்தமாய் போகுது பாரு...''

''ஏதேது! இவங்க ரெண்டுபேருக்கும் இடையில், நீதான் லவ் லட்டரை கொடுத்திருப்பே போலிருக்கு!''

முத்தம்மா, விகற்பம் இல்லாமல் சிரித்தாள்.

இந்த வெளிப்பட்ட, ஓசைப்படாத சிரிப்புக்கு உள்வட்ட மான வரவேற்பு அறையில். பானுவின் அண்ணன் பாஸ்கர னிடம் எதையோ பேசிக்கொண்டிருந்த செல்வம், தணிகா சலத்தைப் பார்த்துவிட்டு, எழுந்து கும்பிட்டான். பிறகு

மணப்பெண்போல் நாணி நின்றான். சினிமாவில் வருகிற பண்ணையார் மாதிரி இல்லாமல், கதர் ஜிப்பாவும், கதர் வேட்டியுமாய் தோற்றங்காட்டி தணிகாசலம் அவனை "உட்காரு தம்பி" என்றார். அந்தக் கனிவான குரலைக் கேட்டதும், செல்வத்திற்கு தைரியம் வந்தது. நாற்காலியில் உட்காரப்போனான் பிறகு, அவர் உட்காராமல் இருப்பதைப் பார்த்துவிட்டு, நாற்காலி சட்டத்தில் பிடித்த கையை எடுத்துவிட்டு நின்றான். தணிகாசலம், பயல் நடிக்கிறானோ என்பதுபோல் நோட்டம் விட்டபடியே உட்கார்ந்து, அவனையும் உட்காரும்படி சைகை செய்தார். செல்வம், அவரையும் அவருக்கு எதிர்ப்பட்ட சோபா செட்டில், கால்மேல் கால்போட்டு உட்கார்ந்திருந்த அவர் மகன் பாஸ்கரனையும் ஒரு சேரப் பார்த்தான் இது அறுபது; அது முப்பது; இது கதர் மயம்; அது டெர்லின் மயம்; அதன் கண்களில் சொத்தின் சுமை, இதன் கண்ணில் அதன் சுவை. அப்பனும் மகனும் தன்னை மாறி மாறி நோட்டம் விடுவதை நோட்டம் விட்டு ஆறுதலுக்குகாக பானுவைப் பார்த்தான். அவளோ கையில் உயிரை வைத்திருப்பவள்போல், அதைப் பிடித்துக்கொண்டிருந்தாள். நீண்ட மௌனம். விழிகளின் கண்காணிப்பு, உணர்வுகளை, எடைக் கற்களாய் கொண்டு மனத் தராசுத் தட்டுக்கள் அங்குமிங்கும் ஆடிக்கொண்டிருந்தன.

இதற்குள் மைதிலி, ஒரு தட்டில் பிஸ்கட்டுகளையும், அதனோடு நான்கு டீயையும் கையேந்தி நடந்து வந்தாள். அவளுக்கு இருபத்தெட்டு வயதிருக்கலாம். சிவப்பு நிறம் இல்லையென்றாலும, உடலில் பரவிய செழுமையும், முகத்தில் பூத்த மதர்ப்பும் ஒருவித கட்டழகு கவர்ச்சியைக் காட்டிக்கொண்டுதான் இருந்தது. அண்ணி செல்வத்தையே பார்த்தபடி நடந்து வருவதால், இடறி விழுவாளோ என்று பயந்தவள்போல், பானுமதி எழுந்து அண்ணியிடமிருந்து தட்டை வாங்கி டீபாயில் வைத்தாள். அவளுக்கு, பலமான

லேசான நாணம். இரண்டையும் ஒன்று சேர்த்த உறுதி; தணிகாசலம் ஒரு பிஸ்கட்டைக் கொறித்தபடியே செல்வத்தைப் பார்த்து, 'பிஸ்கட் எடுத்துக்கப்பா' என்றார்.

ஐந்து நிமிட இடைவெளிக்குப் பிறகு, தணிகாசலமே பேச்சைத் துவக்கினார்.

''ஒன் பேரு என்னப்பா?''

''செல்வம்.''

''என்ன படிச்சிருக்கே?''

''எம். ஏ. எக்னாமிக்ஸ்!''

''இப்போ வேலை பார்க்கிறியா?''

''ஆமாம் கே. ஆர். அன்ட்கோவ்ல டைப்பிஸ்டா இருக்கேன்.''

பாஸ்கரன் முகத்தை சுழித்தபடியே கேட்டான்.

'எம். ஏ. படிச்சுட்டு, போயும் போயும் டைப்பிஸ்டாவா இருக்கீங்க.''

''எந்த தொழிலும் இளக்காரமுன்னு இல்ல. நம்ம நாட்ல மட்டுமில்ல உலகத்துலயும், கஷ்டமான தொழிலை செய்ய முடியாத, பிரபுக்களும், முதலாளிகளும், அப்படிப் பட்ட தொழிலையே இழிவாக்கி வச்சுட்டாங்க. நம் தமிழ் நாட்ல பனையேறுற தொழிலும், மரம் வெட்டும் தொழிலும் நெஞ்சுத்திடமும், உடம்புத்திடமும், உள்ளவங்க செய்யுற வேலை. இந்த வேலைகளை செய்ய முடியாத பண்ணையாருகளும், முதலாளிகளும் இந்தத் தொழிலைக் கேவலப்படுத்தி அந்தத் தொழிலாளிகளை... அதைவிடக் கேவலமாய் வச்சுட்டாங்க. நீங்களும் அப்படி...''

பாஸ்கரன் நிமிர்ந்து உட்கார்ந்தபடியே அவனையே பார்த்தான். பிறகு கேட்டான்.

''எதுக்காக இவ்வளவு பெரிய லெக்சர் அடிக்கிறீங்க.''

''போயும் போயும் டைப்பிஸ்ட் வேலையான்னு கேட்டீங்களே, அதுக்கு ஒரு சின்ன விளக்கம் கொடுத்தேன்!''

பாஸ்கரன், அப்போதுதான் தன் எதிரே உட்கார்ந்திருப்பவனை, சிறிது மரியாதையாய் பார்த்தான். அவன் அழுத்தம் திருத்தமாய் பேசியதை, நம்ப முடியாதவள்போல் இப்படிப்பட்டவனால் எப்படிப் பேச முடியுது என்பதுபோல் சோபாவுக்குப் பின்னால் நின்ற மனைவியை அண்ணாந்து பார்த்தான். அவள் படுக்கறையில், ''ஒரு பரதேசிப் பையனிடம் பேச்சில தோத்துட்டீங்களேன்னு'' சொல்லக் கூடாது என்பதற்காக பேசமுடியாமல் பேசினான்.

''நான் சொல்றதை நீங்க தப்பாய் நினைத்தாலும், நான் சொல்ல வேண்டியதை சொல்லியாகணும். எம். ஏ., படிச்சுட்டு எத்தனையோ பேர் ஐ. ஏ. எஸ்., ஐ. பி. எஸ்., என்று இருக்கும்போது, நீங்க டைப்பிஸ்டாய் இருக்கறதுனால, ஒங்களுக்கு இன்டெலிஜென்ஸும், இன்ஷியேட்டிவ்வும் இருக்காதோ என்கிற சந்தேகத்துலதான் கேட்டேன்!''

''நீங்க கேட்டதை நான் தப்பா நினைக்கல. அதே சமயம், நான் ஏன் ஐ. ஏ. எஸ். எழுதல என்கிறதைச் சொல்லணும். யூனியன் பப்ளிக் சர்வீஸ் கமிஷன்ல, ஹையஸ்ட் பீக், லாங்கஸ்ட் கான்டினென்ட். பிக்கஸ்ட் ஓசன் எதுஎதுன்னுதான் பொதுவா கேள்வி கேட்டுறாங்க, பப்ளிக் ஸ்கூல்ல போலித்தனமான ஆங்கில உச்சரிப்பில் நடமாடுறவங்களாலதான் இப்படிப்பட்ட கேள்விகளுக்கு பதில் சொல்லி ஐ. ஏ. எஸ். ஆக முடியும். இவங்களுக்கு குட்டாம்பட்டியைப் பத்தியோ, சட்டாம்பட்டியைப் பத்தியோ தெரியாது. அது தெரிந்திருக்க நியாயமுமில்ல. சர்வீஸ் கமிஷன்லயும் இவங்க சௌகரியத்துக்குத் தக்கபடிதான் கேள்வி கேட்கிறாங்க.''

''இது ஒங்களுக்கு ஒரு நொண்டி சாக்குன்னு நினைக்கிறேன்.''

''நொண்டி சாக்கோ... நொண்டாத சாக்கோ... எனக்கு இப்போ இருக்கிற டைப்பிஸ்ட் வேலை பிடிச்சிருக்கு. அதை மாத்திக்கிற உத்தேசமும் இல்ல.''

''அப்படின்னா நீங்க, இங்கே வந்திருக்கப்படாது!''

பானுமதி, 'அண்ணா...' என்று அலறப்போனாள். செல்வத்தின் முகத்தில் புன்னகை புழுக்கமாகிக் கொண்டிருப்பதைப் பார்த்ததும், அண்ணனைக் கோபமாக முறைத்தாள். இதற்குள் மைதிலி, கணவனின் கையை வலுவாகத் திருகி அவனை உள்ளறைக்குள் இழுத்துக்கொண்டு போனாள்.

தணிகாசலம், எதையுமே கண்டுகொள்ளாதவர்போல், கையிரண்டையும் மார்போடு சேர்த்துக்கட்டி ஆழமாக யோசித்துக்கொண்டிருந்தார்.

ஐந்து நிமிடம்வரை, ஈயாடவில்லை.

பானுவுக்கு எதுவும் ஓடவில்லை.

செல்வம் எழுந்தான்.

தணிகாசலம் அவனைப் பார்க்காமலே ''உட்கார்'' என்றார்.

பானுமதி, ''உட்காருங்க... உட்காருங்க' என்று அறை குறையாக உளறினாள்.

தணிகாசலம், இப்போது அவனை நேருக்கு நேராய் பார்த்தார். புன்னகை மாறாமலே பேசினார்.

''என் பையன் தங்கைமேல இருக்கிற அன்பாலதான் கேட்டான். தன்னோட மைத்துனன் சொத்துக்களை சம்பாதிக்காட்டாலும், அதைக் கட்டிக் காக்கிறவனாக வாவது இருக்கணுமே என்கிற கவலை அவனுக்கு. காரணம் நியாயமானதுதான். ஆனால், கவலைதான் மோசமானது.

''ஐ ஆம் ஹாப்பி...என் மகள் மேனாமினுக்கிப் பயல்கள் மேல் ஆசைப்படாமல், ஒரு நல்ல பையனை— தனக்குன்னு ஒரு சமுதாயக் கண்ணோட்டம் வைத்திருப்பவனை தேர்ந் தெடுத்ததுக்காக சந்தோஷப்படுகிறேன். இந்த வீட்டுக் குள்ளே, பேசப்போற விவகாரம் தெரிந்தும், இந்தமாதிரி கசங்கிய உடையில் வந்த நீ ஒரு கசங்காத பையன்னு புரிஞ்சுகிட்டேன். பட் என் மகனுக்கும் சம்மதம் வேணும்!''

பானு எழுந்தாள். செல்வத்தை நாணத்தோடும், அப்பாவை மகிழ்ச்சியோடும் பார்த்தபடியே வீட்டுக்குள் ஓடினாள். அண்ணனை மடக்க வேண்டுமானால், அண்ணிக்கு கண்ணி போட வேண்டும். ''அண்ணி...அண்ணி'' என்று மனதுக்குள் கூவியபடியே ஓடியவள், எவரும் வரமாட்டார் கள் என்ற தைரியத்தில், மைதிலி கணவனை வாட்டி யெடுத்ததை காதுபடக் கேட்டாள்.

''ஒங்களுக்கு மூளை இருக்கா? இந்தமாதிரிப் பையன் எங்கே தேடினாலும் கிடைக்காது. நல்லவேளை அசட்டுப் பையனைப் பார்த்துப் பிடிச்சிருக்காள். வீம்பு பிடிச்சவனா இருந்தால் நாளைக்கே பாதி சொத்தைக் கேட்பான். பானு வுக்கு இப்படிப்பட்டவனே தேவை என்கிறதை மறந்துட்டீங் களா... இவன் பிடித்த இடத்துல பிள்ளையார் மாதிரி இருப்பான்!''

''சரியான அழுமூஞ்சாய் இருக்காண்டி.''

''சிடுமூஞ்சைவிட அழுமூஞ்சி எவ்வளவோ தேவல! இவள் புத்திக்கு இவன் போதும். இவள் ஆட்டத்துக்கும், பாட்டத்துக்கும் இப்படிப்பட்டவன்தான் தேவை. நமக்கும் இப்படிப்பட்டவன் கிடைத்தால்தான், சொத்து சுகம் சிதறாமல் இருக்கும். இப்போ எனக்கு எவ்வளவு சந்தோஷ மாய் இருக்குது தெரியுமா? ஒங்கப்பா மாட்டேன்டுடப் போறாரோன்னு பயமா இருக்கு— சீக்கிரமா சரி சொல்லுங்க!''

முன் வாங்கிய பானு, பின்வாங்கினாள். அண்ணிக்கு இப்படிப்பட்ட ஒரு நெகட்டிவ் திருப்தியா... எப்படியோ எந்த முறையிலேயோ, அண்ணனை சம்மதிக்க வச்சால் போதும். எனக்கு வேண்டியது சொத்துச் செல்வம் இல்லை. என் செல்வந்தான்... என்னுடைய செல்வந்தான்.

பானு திரும்பி வந்தபோது, அப்பாவும் 'அவரும்' சுவாரஸ்யமாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள். அவள் செல்வத்திற்கு எதிரே உட்காரப் போனாள். பிறகு நாணப் பட்டு அப்பாவின் நாற்காலிக்குப் பின்புறமாய் நின்று கொண்டாள். இதற்குள் பாஸ்கரனும், மைதிலியும் சிரித்த படியே வந்தார்கள். மைதிலி உட்காரும் முன்பே "சரி நல்ல நாளாய் பாருங்க" என்று சொல்லிவிட்டு, கணவன் எதுவும் குறுக்கே பேசிவிடக்கூடாது என்று அவனைக் கண்டிப்போடு பார்த்தாள்.

தணிகாசலம் நாற்காலியைத் தூக்கி செல்வத்திற்கு எதிரே போட்டுக்கொண்டு உட்கார்கிறார். வருங்கால மாப்பிள்ளையை வைத்த கண் வைத்தபடி பார்த்தார். இருபத்தாறு வயதில் ஞானி போன்ற முகம். ஆனாலும் பிஞ்சில் பழுக்காத நிர்மலமான முகம்; நீண்ட விரல்கள்; எல்லாவற்றையும் விலகியிருந்து பார்ப்பது போன்ற சலன மற்ற பார்வை; எதையும், எவரையும் பெரிதாகவோ சிறி தாகவோ எடுத்துக்கொள்ளாதது போன்ற தோரணை. இந்த பாஸ்கரனும் இருக்கானே... பகலில் ரேஸ்... நைட்டில் மசாஜ் பார்லர்; இவன்மட்டும் எனக்கு மகனாகப் பிறந்திருந் தால் எனக்கு இப்படிப்பட்ட பிரஷ்ஷரே பிறந்திருக்காது."

தணிகாசலம் குரலை கனைத்துக்கொண்டார். ஏற்ற இரக்கமற்ற குரலில் பேசினார்.

"ஒன்னை எங்களுக்கு பிடிச்சிருக்கு தம்பி. பானு கொடுத்து வைத்தவள். ஒன்னைமாதிரி குணமுள்ள பைய னுக்குத்தான் நானும் காத்திருந்தேன். ஒன்னோட வீட்டு

நிலைமையைப் பற்றி எனக்குக் கவலையில்லை. ஆனால் என்னோட வீட்டு நிலைமையை நான் சொல்லியாகணும். நானும் ஒன்னை மாதிரி கஷ்டப்பட்டவன்தான். கிராமத்துல இருந்து ஓடிவந்து, ஒரு மளிகை கடையில் வேலைக்கு சேர்ந்து அப்புறம் படிப்படியாய், முன்னுக்கு வந்தவன். இப்போ எனக்கு ஒரு சினிமா தியேட்டர் இருக்குது. இவ்வளவு பெரிய வீடு இருக்குது; அம்பத்தூர்ல ஒரு சின்ன பேக்டரி இருக்குது; பாலவாக்கத்துல நூறு கிரவுண்ட் இடம் இருக்குது; தேனாம்பேட்டையில் பெரிய அரிசி மண்டி இருக்கு; பேங்க் லாக்கர்ல பானுவுக்கு நூறு பவுன் நகை இருக்குது; இதையெல்லாம் கணக்குப் பார்த்து செட்டில் செய்து உயில் எழுதிட்டேன். இந்த வீடு, அம்பத்தூர் பேக்டரி, நூறுபவுன் நகை பானுவுக்கு. அரிசி மண்டி, நூறு கிரவுண்ட் மனை, ரியல் எஸ்டேட், கார் பேங்க்ல இருக்கிற கேஷ் என்னோட மகனுக்கு...''

பானு குறுக்கிட்டாள்.

''இப்போ இந்த பேச்செல்லாம் எதுக்குப்பா...''

''நீ சும்மா இரும்மா! தாய் பிள்ளையாய் இருந்தாலும் வாயும் வயிறும் வேறம்மா. இந்த உயில் விவரத்தை இப்போ தான் சொல்றேன். ஒனக்கும் ஒன் அண்ணனுக்கும் செட்டில் பண்ணிட்டேன். ஒண்ணாய் இருக்கணுமா...தனியாய் இருக்கணுமா...என்கிறதை நீங்க, என் காலத்துக்குப் பிறகு முடிவு செய்துகொள்ளலாம். பானு நீகூட யோசிக்கலாம்; நான் ஏன் இவ்வளவு அவசரப்பட்டேன்னா, எனை உடம்புல ஹைபர் டென்ஷன், டயபடிக்ஸ்; ஒனக்கு ஒரு வழி செய்யணுமேன்னுதான் உயிர் ஓடிட்டு இருக்குது. இப்பவோ நாளையோன்னு...''

''அப்பா...அப்பா...''

''பொறும்மா... எனக்கு நீங்க கிடைச்சதுல ரொம்ப திருப்தி. நான் சொத்தை செட்டில் செய்திட்டாலும் இந்த சொத்தும், வீடும் பிரியாமல் இருக்கனுமுன்னுதான் விரும்பு

கிறேன். நீயும் என் மகனும் ஆயுள் முழுதும் ஒரே வீட்ல ஒரு தாய் பிள்ளை மாதிரி வாழணும் என்பதுதான் என் ஆசை. சொல்லு தம்பி... இந்தக் குடும்பமும் என் பிள்ளைகளும் வாழ்நாள் வரைக்கும் ஒண்ணா இருப்பதுக்கு என் பொறுப்புன்னு ஒரு வார்த்தை சொல்லு தம்பி...''

சுவர் கடிகாரத்தையும், வீடியோ கேஸட் செட்டையும், வால் பேப்பரையும் பிளாஸ்டிக் தரையையும் ஏகாந்தமாய் பார்த்துக்கொண்டிருந்த செல்வம், அவரையே உற்று நோக்கினான். பிறகு அமைதியாகச் சொன்னான்.

தனிப்பட்ட முறையில் என் கருத்தைக் கேட்டிங்கன்னா, இந்த சொத்து விவகாரத்தை அண்ணன் தங்கை முடிவுக்கே விட்டிருக்கணும். ஆனாலும் இது உங்க பெர்ஸனல் விவகாரம். எனக்கு சம்பந்தமில்லை; அதே சமயம் என் அம்மா ஸ்தானத்துல ஒங்களை வச்சு உறுதியாய் சொல்றேன். உலகத்தில் இன்பத்திலேயே பெரிய இன்பம் எல்லாரும் ஒன்றாய் கூடி, ஒன்றாய் சாப்பிட்டு, ஒன்றாய் இருக்கிறதுதான். தனிப்பட்ட முறையில், நட்சத்திர ஹோட்டல்களுக்குப் போய் சாப்பிடுறதைவிட, கூழானாலும் அதை வீட்டில் ஒன்றாய் சாப்பிடுறதுல இருக்கிற திருப்தி எதுலயும் கிடையாதுங்க அய்யா. நான் சின்ன வயசுல கிராமத்தில இருக்கும்போது எங்க பங்காளிப் பையன்களை ஒன்றாய் சேர்த்து, குருகுலம் மாதிரி குடிசை போட்டு இருந்தவன். தோட்டத்துக்குக் காவலுக்குப் போகும்போது, சரல் மேட்ல எல்லாப் பையன்களும் ஒண்ணா படுப்போம், வீட்ல இருந்து கொண்டுபோற சாப்பாட்டை, ஒன்றாய் கலந்து சாப்பிடுவோம். அந்த ஆனந்தத்தை நினைக்கும்போது இப்போ கூட என் உடம்பெல்லாம் புல்லரிக்கிறது. இதை எதுக்கு சொல்றேன்னா ஒங்க சொத்து விவகாரத்துல நான் சம்பந்தப்படப் போறதில்ல! பானுவை என் சொத்தாகவும்; பாஸ்கரனை என் மைத்துனராகவும், இவங்களை என் சகோதரியாவும் நினைக்கிற உரிமை மட்டும் கிடைத்தால் எனக்குப் போதும்.''

உயில் விவகாரத்தை ஓசைப்படாமல் எழுதிய அப்பாவை கருவியபடியே பார்த்த பாஸ்கரன், சிறிது தெம்படைந்தான்

''பார்த்தீங்களா... ஒன் அப்பா செய்த காரியத்தை' என்று கணவனின் இடுப்பை அரவம் இல்லாமல் கிள்ளி செய்கையால் பேசிக்கொண்டிருக்கிறாள் மைதிலி.

பானுமதி தன் காரியம் இவ்வளவு எளிதாய் தீர்ந்து விடும் என்று எதிர்பார்க்காதவள்போல், தரையில் கால் பாவாதவளாய் அங்குமிங்குமாய் நடந்தாள். பரவா யில்லையே... செல்வம் வெளுத்து வாங்கிவிட்டாரே!...போடி அவரு வெளுத்தும் வாங்கல, மறுத்தும் வாங்கல. மனசுல இருக்கிறதை அப்படியே சொல்லிட்டார். அண்ணிமாதிரி அமுக்கத் தேவையில்லாதவர். மகாத்மா காந்தி சொன்னது மாதிரி வாழ்க்கையையே ஒரு செய்தியாக்க நினைத்தவரு. உண்மைக்கு எதுக்கு மேக்கப்?'

தணிகாசலம், செல்வத்தை வாஞ்சையோடு பார்த்தார். பிறகு பின்னால் நின்ற பானுவின் கையைப் பிடித்து முன் பக்கமாய் கொண்டு வந்து, அவள் இடையைப் பிடித்தபடியே பேசினார்.

''எப்படியோ... எல்லாம் நல்லவிதமாய் முடியுது. என்னோட அனுபவத்தை வச்சு, ஒன்னை பார்த்தபோது, நீ திறந்த மனசுக்காரன். பழி பாவம், பொய், மோசடி இதுக்குத் தவிர, எதுக்கும் பயப்படாதவன் என்கிறது எனக்கு புரிஞ்சுட்டுது. இந்த வீட்ல மூணும் மூணு விதம். இவன் முன்கோபி; சின்னவயசிலேயே செல்வமாய் வளர்த்த தால் கஷ்டத்தைத் தவிர, எல்லாவற்றையும் தெரிஞ்சவன். பானு சென்ஸிட்டிவ், தொட்டால் சுருங்கி; என் மருமகளோ தொடாமலே சுருங்கி. நீ குடும்பத்துல ஒரு ஆளாய் ஆயிட்ட தால ஒன்கிட்டே இதை சொல்லறதுல தப்பில்ல. ஆனாலும் மூணுபேரும் ஒருவர் குறையை இன்னொருவர் நிறை

வேற்றுவதுமாதிரி... மொத்தத்தில நல்லவங்கதான். என் ஆசையெல்லாம் நான் கண் மூடினபிறகும் என் பிள்ளைங்க இப்போ இருக்கறமாதிரியே இருக்கணும். அதனால ஒனக்கு இந்த வீட்ல தகப்பன் ஸ்தானம், பாஸ்கரன் ஒனக்கு திருப்தி தானடா... மைதிலி ஒனக்கு...?''

''பிடிக்காட்டி அப்பவே சொல்லியிருப்பேனே மாமா... அண்ணனை எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு. பானுவைவிட, அதிகமாகவே பிடிச்சிருக்கு.''

எல்லோருமே சிரித்தார்கள்; செல்வம் அவர்கள் காட்டிய வாஞ்சையில் திக்குமுக்காடினான்.

இப்படிப்பட்ட பாசபாங்கை பார்த்தறியாத, செல்வத்தின் நெஞ்சம் நெகிழ, மேனி நெக்குருக, தலையை சாய்த்தபடி ஒவ்வொருவரையும் பாசம் பொங்கப் பார்த்தான்.

தணிகாசலம் முடிவுரை கூறினார்.

''நாளைக்கு ஜோஸ்யரைப் பார்த்து நல்லநாள் பார்க்கிறேன். டேய் பாஸ்கர்...ராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தை புக் பண்றதுக்கு ஏற்பாடு செய். எங்க ஜாதியிலேயே இப்படி ஒரு பையன் கிடைச்சதுல எனக்கு ரொம்ப ரொம்ப சந்தோஷம். வேற ஜாதிக்காரன், அவன் கடவுளாய் இருந்தாலும், என்னால் நினைத்துக்கூடப் பார்க்க முடியாது. ஆமாம் தம்பி, நம்ப ஆட்கள் பொதுவாய் தஞ்சாவூர்லயும் திருச்சியிலயும்தான் அதிகமாய் இருக்காங்க... திருநெல்வேலியில நம்ம சாதிக்காரங்க எந்தப் பக்கம் அதிகமாய் இருக்காங்க? மைனாரிட்டியாதான் இருப்பாங்கன்னு நினைக்கேன்; இல்லியா...''

செல்வம் நினைவற்றவன்போல் தவித்தான். இதற்கு எப்படி பதிலளிப்பது? பதிலளிக்க முடியும் எஸ்.எஸ்.எல்.சி. முடித்தவுடன், சென்னைக்கு வந்துவிட்டதால், சரியாய் தெரியாது என்று சொல்லிவிடலாம். அது பதிலுரையல்ல;

பழியுரை. மனந்திறந்து பேசிய ஒருவரிடம்—வாஞ்சையோடு பார்க்கும் ஒரு குடும்பத்திடம்—உண்மையையே மறைப்பது பஞ்சமா பாதகங்களில் படுபாதகம். நான் வேறு ஜாதிக் காரன் என்று சொல்லி, இவர்கள் என்னை உதாசீனம் செய்தால்... நான் என்னாவது பானு? என்னாவது? இது இருவர் பிரச்சினைதான். ஆனாலும் நம்பிக்கை பிரச்சினை யும்கூட. ஜாதிகள் போலிதான். அதற்காக அந்த போலித் தனத்தை மறைப்பதும் ஒரு போலிதானே! உண்மையைச் சொல்லத்தான் வேண்டும். அது சுட்டாலும் தாங்கிக் கொள்ள வேண்டும். என்னை இந்த வீட்டுக்கு தகப்பன் ஸ்தானத்தில் வைப்பதாகக் கூறும் ஒரு பெரியவரிடம் நான் பொய்யுரைக்கக்கூடாது. தப்பு... பெருந்தப்பு!

செல்வம் எழுந்தான். தணிகாசலத்தைப் பார்த்தான். பிறகு ஒப்புவித்தான்.

''இதுவரைக்கும் ஒரு உண்மையை நான் சொல்லாமல் இருந்ததுக்காக நீங்க என்னை மன்னிக்கணும். எனக்கு ஜாதி களில் நம்பிக்கை கிடையாது. 'ஜாதிகள் இருக்கென்று சொல் வாறும் இருக்கின்றானே' என்ற பாரதிதாசன் வரிகளை அடிக்கடி சொல்லிக்கொள்பவன் நான்; அந்தப் பின்னணியில் தான் இப்போ சொல்றேன்: நான் உங்க ஜாதியில்ல... வேற ஜாதிக்காரன். அப்பா, ஊர்ல பிறத்தியார் நிலத்துல கூலி வேலை செய்துட்டு இருந்தவரு. அஞ்சாறு வயசிலேயே என் அம்மா இறந்துட்டார். அதுக்கு ஆறாவது மாசமே அப்பா இரண்டாவது கல்யாணம் செய்துட்டார். எங்க சித்தி என்னை செய்யாத கொடுமை இல்ல; எப்படியோ பல்லை கடிச்சிட்டு எஸ்.எஸ்.எல்.சி. வரை படித்தேன். அப்புறம் அரசாங்க ஹாஸ்டல்ல தங்கி எம்.ஏ. வரைக்கும் ஒரு வழியாய் படிச்சுட்டேன். நான் ஒரு அனாதை. பானுவுக்கு இது தெரியும். அவள், ''ஸார், நீங்க எங்க ஜாதின்னே சொல்லுங்க'' என்று சொன்னபோது, ஜாதி போலி என் கிறதாலயும், அவங்களோட காதலுக்கு உட்பட்டும் சம்மதிச்

கூட்டேன். ஆனாலும், நீங்க என்மேல் இவ்வளவு அன்பு காட்டும்போது நான் என்னைப்பற்றி சொல்லாவிட்டால் அது பெரிய துரோகம். நான் வேற ஜாதிக்காரன்தான்; இப்போ சொல்லுங்க... ஒங்களுக்கு பானுவைக் கொடுக்கச் சம்மதமுன்னா, உட்காரச் சொல்லுங்க. உட்காருறேன்... இல்லேன்னா, போறேன்!''

எல்லோரும் மௌன முகமாகிறார்கள். ஆயிரம் மரபுகளை உதறினாலும், ஜாதியை உதறமுடியாத தணிகாசலம் நிலைக்குத்திய கண்களோடு மௌனம் சாதித்தார். உயில் விவகாரம் இருக்கும் வரை, ஜாதி விவகாரம் இருக்கட்டும் என்பதுபோல், பாஸ்கரன் தம்பதி ஊமையானார்கள்.

பானுதான் படபடத்து அவன் முன்னால் வந்தாள். ''உட்காருங்க... உட்காருங்க...'' என்று கத்தினாள்.

''அப்பா, அவரை உட்காரச் சொல்லுங்க. அண்ணி, அவரை இருக்கச் சொல்லுங்க! அண்ணா ஆஸ்கிம் டு சிட்'' என்று ஆவேசக் குரலில் அச்சப்பட்டது போலவும், அச்சுறுத்துவது போலவும் கூவினாள்.

தணிகாசலம், தன்பாட்டுக்கு உட்கார்ந்திருந்தார். பாஸ்கரன், அவனை அங்கே இல்லாததுபோல் பாவித்தான். மைதிலி ''பானு கொஞ்சம் அடக்கமாய் பேசு'' என்று எச்சரித்தாள். செல்வம், அந்த அறையையும், அதன் வாசிகளையும் கண்களால் சுற்றிப் பார்த்தான். பிறகு மௌனமாய், வேகமாய் வெளியேறினான்.

## 3

செல்வம், தனித்திருந்தான். பத்து நாட்களில் முகத்தில் ரோமக் கணைகள், அம்புக்குறிகளாய் நின்றன. அலுவலகத்திற்கு, பானு பல தடவை டெலிபோன் செய்

தாள். எப்படியோ, அவன் அவற்றைத் தள்ளுபடி செய்து விட்டான். கடைசியாக ஒரு நாள் தீர்மானமாகச் சொல்லி விட்டான். ''உன் அப்பாவாய் மனம் மாறி, என்னைக் கூப்பிடும் முன்னால், நாம் தனித்துப் பேசுவதில் அர்த்த மில்லை'' என்று கூறிவிட்டான்.

ஆனால், அன்றைக்கு அவனுக்குப் பிரிவின் உச்சகட்டம். அவளைப் பார்க்காமல் இருக்க முடியாத தவிப்பு; பார்த்துத் தான் ஆக வேண்டும் என்ற துணிவு; அவளில்லாமல் வாழ முடியாது என்ற நிதர்சனம். அதேசமயம், ஒரு குடும்பத் திற்குள் ஆமைபோல் புகலாகாது என்ற கண்டிப்பான எண்ணம். வாழ்க்கை, காதலைவிடப் பெரியது என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டான். ஆனாலும், கண் முன்னால் அவளே வந்தாள். கடற்கரையும் அவ்வப்போது அவளோடு பார்த்த திரைப்படங்களும், அவனை அலைக் கழித்தன. அலுவலகத்திற்கு அவள் டெலிபோன் செய்வாள் என்று எதிர்பார்த்தான். அவளும் வைராக்கியமாயிருந்தால், அதில் தவறில்லை என்றும் மனதுக்கு புத்திமதி சொன்னான்.

அறைக்கு வந்தவனால், நிலைப்பட முடியவில்லை. தன்னையும்மீறி, மளிகைக் கடைக்குப் போய், அவள் வீட்டுக்கு டெலிபோன் செய்யப் போனான். ரிஸீவரைக்கூட எடுத்துவிட்டான். ஏனோ டெலிபோன் செய்ய இயல வில்லை; திரும்பி அறைக்கு வந்து அலைமோதினான். ஒரு வேளை தான் நடந்துகொண்ட விதம் தவறுதானோ என்று நினைத்துக்கொண்டான். இருக்க முடியவில்லை. எழுந்தான். எழ முடியவில்லை இருந்தான். இரண்டையும் செய்ய முடியாமல் படுத்தான்.

வளையல் சத்தம் கேட்டும், அவன் கண் திறக்கவில்லை. காதுக்கு இப்படிப்பட்ட சத்தத்தை பல நாளாய் கேட்கிற அவனுக்கு, அப்போது அந்தச் சத்தமும் ஒரு பிரமை போல் தான் தோன்றியது. ஆனாலும், முகத்தில் ஏதோ ஒன்று தடவுவதைப் பார்த்துவிட்டுக் கண் விழித்தான்.

பானுமதி, கண்ணீரும் கம்பலையுமாக அவனை குனிந்து உற்றுநோக்கினாள். கண்ணீர், அவள் கண்ணில் சொட்டுச் சொட்டாகி, அவன் மார்பில் திட்டுத் திட்டாய் விழுந்தது. அவன் ஆவேசமாய் எழுந்து, அவளை அழுந்தப் பற்றிக் கொண்டான்.

''நான் இல்லாமல், ஒன்னால இருக்கமுடியுதா பானு? என்று அவளுக்குக் கேட்காத குரலில், கேட்டுக் கொண்டான்.

அவளோ அவனை விடப்போவதில்லை என்பதுபோல், உடலாலும் பிரியப்போவதில்லை என்பதுபோல் அவனை தன் மார்பின் கவசமாக்கிக்கொண்டாள். அப்படியும் இப் படியுமாய், ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்து விலகினார்கள். அவள் ஏதோ பேசப்போனாள், அழுகை வந்தது. பிறகு கேவியபடியே கேட்டாள்.

''நான் இல்லாமல் இருக்கிற அளவுக்கு ஒங்களுக்கு தைரியம் வந்துட்டது என்ன...?''

''ஆமாம். அதனாலதான், இப்படி படுத்த படுக்கையாய் தாடியும் மீசையுமாய் கிடக்கிறேன்!''

''இது புரிந்தால், நீங்க அப்பாகிட்டே, இப்படி ஏடாகோடமாய் பேசியிருப்பீங்களா...''

''இப்பவும் நான் சொன்னதுக்காக வருத்தப்படல. உண்மை பேச விரும்புகிறவன், அதன் விளைவுகளுக்கும் தயாராய்த்தான் இருக்கணும் பானு! எப்படியோ...ஒன்னை பாத்துட்டேன். அது போதும் எனக்கு.''

''அப்படின்னா, என்னை திரும்பிப் போகச் சொல்றீங்களா?'

''என்ன சொல்றே?'

"அப்பாகிட்டே எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தேன்! அவர் மௌனம் சாதிக்கிறார். உங்ககிட்டே பேசினார் பாருங்க. அதுதான் அவர் பேசிய கடைசி பேச்சு. அதுக்குப் பிறகு, ஒரே மௌனமாயிட்டார். ஜாதில என்னப்பா இருக்குதுன்னு கேட்டேன். நீங்க கஷ்டப்பட்டப்போ, நம்ம ஜாதில எவர்பா உதவுனான்னு கேட்டேன். கேட்டதுக் கெல்லாம் மௌனம். கோபத்துலயோ இல்ல ஆத்திரத் துலயோ... மாத்திரை சாப்பிட மறுக்கிறார். பிரஷ்ஷர் கூடிட்டு. அவருக்கு வேளாவேளைக்கு மாத்திரைகளை மட்டும் கொடுத்தேன். நம்ம பேச்சை எடுக்கிறது இல்ல. இப்போ அப்பாவுக்கு உடம்பு தேவல. உங்களை என்னால பார்க்காமல் இருக்க முடியல. ஒரு முடிவோடு, கட்டின புடவையோடு, கைவளையல்களையும், சுழற்றி வச்சுட்டுப் புறப்பட்டுட்டேன். இனிமேல் அந்த வீட்டுக்கு போகிறதா இருந்தால் ஒங்களோடுதான் போவேன்."

"இப்போ என்ன செய்யலாம் என்கிறெ."

"இதுகூடவா சொல்லித் தெரியணும்... ரிஜிஸ்டர் ஆபீஸ் எந்தப் பக்கம் இருக்குது? ஏன் யோசிக்கிறீங்க. என்னை மனைவியாய் ஏற்றுக்க மறுக்கிறதுக்கு வேற சாக்கில்லையேன்னு யோசிக்கிறீங்களா?"

"இப்படிப்பட்ட ஒரு எண்ணம் ஒனக்கு வந்ததே தப்பு பானு!"

"அப்படின்னா என்னைக் கல்யாணம் செய்துக்க சம்மதமா..."

"இது என்ன கேள்வி? ஒன்னை கைவிடணுமுன்னு எப்பவும் நினைக்கல. எப்போவாவது என்னை மறந்துடுன்னு உன்கிட்டே சொல்லியிருக்கேனா?"

"வாயால் எப்பவும் சொன்னதே இல்ல."

"செய்கையாலயும் காட்டியதில்லே. ஆனாலும் கடைசி யாய் சொல்றேன் பானு... நான் டைப்பிஸ்ட். ஐநூறு ரூபாய் சம்பளக்காரன். இந்த அறைதான் நம்மோட பங்களா. இந்த

கொசுக்கள்தான் நம் தோழர்கள். வெளியில் இருக்கிற பம்பு தான் நம்மோட ஷவர். இந்தக் கட்டில்தான் நம்மோட டைனிங் டேபிள்..."

"ஏன் அபத்தமாய் பேசுறீங்க. எல்லாவற்றையும் விட்டுட்டு, அப்பாவையும் விட்டுட்டு வந்திருக்கேனே, இதுல இருந்து என்ன நீங்க புரிஞ்சுக்கலியா? இப்போகூட நான் சொல்றேன். நீங்க இல்லாமல் நான் வாழ முடியாது. அதே சமயம் நான் இல்லாமல் உங்களால் வாழ முடியுமுன்னால், சொல்லுங்க, நான் விலகிக்கிறேன்!"

செல்வம், அவள் கரங்களை எடுத்துத் தன் தோளில் போட்டுக் கொண்டான். அவளையே உற்று நோக்கினான். அவளோ அவனை தீர்க்கமாகப் பார்த்தபடி "சொல்லுங்க, நான் இல்லாமல் நீங்க வாழ முடியுமுன்னால்...தாராளமாய் விலகிக்கிறேன்" என்றாள்.

செல்வம், அவளை மார்போடு சேர்த்து, மணிப்புறா வைப் பிடிப்பதுபோல் பிடித்துக்கொண்டான். பானு தேம்பிய படியே பேசினாள்.

"என்னைப் பொறுத்த அளவில், நான் சாகிறதாய் இருந்தாலும் உங்க மடியில் படுத்தபடியே சாகணும் என் கிறதுதான் என் ஆசை."

"அபசகுனமாய் பேசாதே!"

"அப்போ சுபசகுனமான காரியத்துக்கு ஏற்பாடு செய்யுங்க..."

"எழுந்திரு."

# 4

தணிகாசலம், படுத்த படுக்கையாகிவிட்டார். ஏற்கனவே உடல்நலம் குன்றிப்போன அவரிடம் பாஸ்கர் வந்து, ''பானு, நம்ம தலையில் கல்லைப் போட்டுட்டா அப்பா! செல்வத்தை ரிஜிஸ்டர் மேரேஜ் செய்துக்கிட்டாளாம்! நீங்க வரச்சொன்னால் வருவாளாம்... என்ன சொல்றது'' என்று சொன்னபோது அவர் மௌனியானார். கூந்தலை வலது தோள் வழியாகத் தொங்கப் போட்டபடி ஜடை பின்னிக் கொண்டே வந்த மைதிலி, ''அவள் பெயருக்கும் சரிசமமாய் சொத்து எழுதிவச்ச திமிர்ல அவள் செய்திட்டாள். நம்ம ஜாதில இல்லாத வழக்கமாய் உயில் எழுதுனதால தான் அவள் இப்படி வேற ஜாதில, நம்ம சொல்லையும் மீறி செய்துகிட்டாள்'' என்றாள்.

தணிகாசலம், பதிலளிக்கவில்லை. பேசிய மருமகளையும், பேசப்போன மகனையும், ஏறெடுத்துப் பார்க்கவில்லை. கூனிக் குறுகியவராய், குப்புறப் படுத்தார். தனக்குள்ளேயே பேசிக்கொண்டார்.

என்னதான் மனம் பல கோணங்களில், மகளின் செய்கையை நியாயப்படுத்திப் பார்த்தாலும் வாழையடி வாழையாய், ஆயிரமாயிரம் ஆண்டாய் சப்த நாடிகளில் ஊடுறுவிய ஜாதிய உணர்வை, அவரால் உதற முடியவில்லை. வேற ஜாதிக்காரனை, மாப்பிள்ளையாக நினைக்கும்போதெல்லாம், அவருக்கு பிரஷ்ஷர் ஏறியது.

ஒரு வாரம் விடாப்பிடியாய் ஓடியது.

தணிகாசலம், எலும்பும் தோலுமாகி, இறுதியில் அவை கூட இல்லாதது போலாகிவிட்டார். அதுவரை அபயக்குரல் கொடுத்த டாக்டரும், அபாயக்குரல் கொடுத்துவிட்டார், மாத்திரைகளோடு வந்த மருமகள், மாமனாரிடம் வாஞ்சையோடு பேசினாள்.

''அந்த பாவிப் பொண்ணால், எப்படி இருந்தவர் எப்படி ஆயிட்டீங்க... ஒங்களை எட்டிக்கூடப் பார்க்காதவள் இனிமேல் இருந்தென்ன, போயென்ன! கவலைப்படாதிங்க. ஒங்களுக்குப் பிறகு, நாங்ககூட அவளைக் கிட்டே சேர்க்க மாட்டோம். ஒங்க மகன் உயிலை மாற்றி எழுதலாமுன்னு அப்பாகிட்டே கேளு. ஒருவேளை, அப்பா கண்ணை மூடின பிறகு அவள் புருஷன், அதுதான் அந்த நடிகன், அவளை உருட்டி மிரட்டி சொத்துக்களைச் சூறையாடி அவளை நடுத் தெருவில விட்டுட்டால் நமக்குத்தானே அவமானமுன்னு சொன்னார். அதனால உயிலை மாற்றி எழுத வக்கீலைக் கூட்டி வரலாமான்னு கேட்கச் சொன்னார். என்ன சொல்றீங்க...''

தணிகாசலத்திற்கும், அவள் சொல்வது நியாயமாகப் பட்டது. புருஷன் பெண்டாட்டியை மோசம் செய்யலாம். ஆனால் அண்ணன் செய்யமாட்டான். ஒருவேளை அந்தப் பயல் நடிகனாய்கூட இருக்கலாம். அவன் கிடக்கட்டும், என் மருமகள் ஏன் நடிகையாய் இருக்கப்படாது. இவளாவது அடுத்தவன் பெண். நான் பெற்ற பெண்ணே, என்னை வந்து எட்டிப் பார்க்கலேயே! காலையில் எழுந்தவுடனேயே என் காலைத தொட்டுக் கும்பிட்டு ஆசீர்வாதம் வாங்கும் என் மகளே என்னைப் புறக்கணிச்சுட்டாளே! ஒருவேளை அப்பா தான் பாதிச் சொத்தை நமக்கு எழுதி வச்சுட்டாரே என்கிற திமிராய் இருக்குமோ? ஒருவேளை அந்தப் பயலே அவளை வரவிடாமல் வைத்திருப்பானோ... அவன் சொன்னாலும், அவளுக்கு எங்கே புத்தி போச்சுது? அவளே என்னை அப்பா

இல்லன்னு ஒதுக்கும்போது, என் சொத்து ஏன் அவளுக்குப் போகணும்? அவள் உருப்படியாய் வச்சிருப்பாள் என்கிறது என்ன நிச்சயம்?

தணிகாசலம், தன்னை ஏங்கிய முகத்தோடோ அல்லது வீங்கிய முகத்தோடோ பார்த்த மருமகளிடம், ''வக்கீலை வரச் சொல்'' என்று சொல்லப்போனார். ஆனாலும் அதற்கான வார்த்தைகள் வரவில்லை. ஆயிரந்தான் இருந்தாலும், பானு அவர் மகள். ஒருவேளை அவள் நிலைமை எப்படியோ, விட்டுப் பிடிப்போம்.

அவர் திக்குமுக்காடிச் சொன்னார்.

''இன்னைக்கு யோசித்து நாளைக்குச் சொல்றேன்.''

மைதிலி ''இதுல யோசிக்கறதுக்கு என்ன இருக்கு?'' என்று கேட்டபடியே மாமனாரைப் பார்த்தபோது, அவர் முகத்தைத் திருப்பிக்கொண்டார். அப்போது அந்த பக்கமாக வந்த வேலைக்காரி முத்தம்மாவிடம், மாத்திரைகளைக் கொடுத்துவிட்டு, மைதிலி கால் செருப்புகள் தரையை மத்தளம் போல் தேய்க்க ஆங்காரமாக திரும்பிப் போனாள்.

முத்தம்மா அந்தப் பெரியவரைத் தூக்கினாள். அவர் தலையை மடியில் போட்டபடியே மாத்திரைகளை நீரில் கரைத்து, குவளையில் ஊற்றி குழந்தைக்குக் கொடுப்பது போல் கொடுத்தாள். அதைக் குடித்து முடித்த தணிகாசலம் இதுவரை தன்னால் ஒரு பொருட்டாக நினைக்கப்படாத அவளிடம், தன் தாயைக் கண்டார். குழந்தைபோலவே முறையிட்டார்.

''முத்தம்மா!''

''என்னங்க அய்யா...''

''என் மகளை எப்படி வளர்த்தேன்னு நான் சொல்ல வேண்டியதில்ல. அவளுக்காகவே இரண்டாவது கல்யாணம் செய்துக்காமல் இருந்தேன். அவளுக்கும் சொத்துல சரிக்குச்

சமத்தையாய் உயில் எழுதி வச்சிருக்கேன். சொல்லாமல் கொள்ளாமல் போயிட்டாள் பாரு! நான் கண் மூடின பிறகாவது அவனைக் கட்டியிருக்கலாம் சரி எப்படியோ அவனைக் கட்டிக்கிட்டாள். போகட்டும்... தொலையட்டும்... புருஷன் வந்துட்டதனால் பெத்தவனை மறந்துடணுமா முத்தம்மா... நான் உயிருக்குப் போராடிக்கிட்டு இருக்கேன்னு அவளுக்கு தெரியாமலா இருக்கும்? அப்படியே தெரியாவிட்டாலும் என்னை ஒரு தடவை, ஒரே தடவையாவது வந்து பார்க்கக் கூடாதா... சொல்லு முத்தம்மா... நீயும் பிள்ளைகுட்டிக் காரி! ஒனக்கு இருக்கிற கரிசனத்துல என் மகளுக்கு ஆயிரத்துல ஒன்று இல்லாமல் போயிட்டுது பாரு!''

முத்தம்மாவுக்கு அழுகை அழுகையாய் வந்தது. வேலையாட்களையும், பிள்ளைகள் மாதிரி பாவிக்கும் அந்தப் பெரியவரின் கண்களைத் துடைத்துவிட்டாள். பிறகு, அக்கம்பக்கம் பயத்தோடு பார்த்துக்கொண்டே ஜாக்கிரதையாகப் பேசினாள்.

''அந்த பாவிப் பொண்ணு... தினமும் வீட்டு கேட்டு வரைக்கும் வந்துட்டுத்தான் போகுதுங்க அய்யா! ஒங்க மகன், அதை உள்ளே விடப்படாது; அப்படி விட்டால் நாங்க வேலையில் இருக்கமுடியாதுன்னு கண்டிப்பாய் சொல்லிட்டது. இன்னைக்கு வந்து கண்ணீர் விட்டு கதறிச்சுது... 'அப்பா உங்களைப் பார்த்தால், அவருக்கு உடம்பு மோசமாயிடும். அதனால பாக்க முடியாது'ன்னு இதோ, இந்தப் பாவியே, சின்ன முதலாளி சொல்லிக் கொடுத்ததை ஒப்பிச்சேன். அப்போ, நான் எடுத்து வளர்த்த பொண்ணு அப்பாவை அவருக்குத் தெரியாமல் தொலைவில் நின்றாவது பார்த்துட்டுப் போறேன்னு கண்ணீரும் கம்பலையுமாய் புலம்பிச்சுது. நான், என்னோட ஒரு சாண் வயித்துக்குப் பயந்து ஒங்க பொண்ணை துரத்திட்டேன். அவளை

உள்ளே விட்டால் ஒன்னை சுட்டுப் பொசுக்கிடுவேன்னு அய்யா வேற மிரட்டியிருக்கார். இருதலைக் கொள்ளி எறும்பாய் தவித்தேங்க அய்யா!''

தணிகாசலம் திடுக்கிட்டவர்போல் விழிகளை உருட்டினார். மேலே ஓடிய மின்விசிறிகளையே வெறித்துப் பார்த்தார். முத்தம்மா, அவரைக் கட்டிலில் கிடத்திவிட்டு, ஒடுங்கிப்போய் நின்றாள். அவளுக்கு அவரைப் பார்க்கப் பாவமாகவும் பயங்கரமாகவும் தோன்றியது. தணிகாசலம் தட்டுத் தடுமாறிப் பேசினார்.

''நாளைக்கும் வருவாளா முத்தம்மா?''

''கண்டிப்பா வருங்க அய்யா...''

''நீ ஒன்று செய்...அவளைப் பார்த்ததும், பார்க்காதது மாதிரி ஒதுங்கிக்கோ!''

''நீங்க உத்தரவு கொடுத்திட்டிங்க. நான் எதுக்கு ஒதுங்கணும். இப்பதான் எனக்கு விஷயமே புரியுது. என்ன ஆனாலும் சரி, துப்பாக்கிக் குண்டு பாய்ஞ்சாலும் சரி, நாளைக்கு அம்மாவைக் கையோட கூட்டி வாரேங்க அய்யா...''

தணிகாசலம் திருப்தியோடு தலையாட்டியபோது, முத்தம்மா வெளியேறப்போனாள். அவளை சின்னக்குரலில் கூப்பிட்டார்.

''என்னங்க அய்யா!''

''ஆள் எப்படி இருக்காள் முத்தம்மா?''

''கண்ணால் பார்க்க முடியாதுங்க அய்யா...''

''அப்படின்னா...''

''குடும்ப வாழ்க்கையில குறை இருக்குது மாதிரி தெரியலிங்க அய்யா! ஏன்னா... இன்னைக்கு அந்தப் பிள்ளையாண்டானும் வந்தாரு. நம்ம அப்பாவைப் பார்க்க முடியலியே

என்கிற ஏக்கந்தான், பாவிப் பொண்ணை, கண்கொண்டு பார்க்க முடியாமல் கண்ணு உள்ளுக்குப் போயிட்டுது. கன்னம் பள்ளமாயிட்டுது. அழுது அழுது, கண்ணே கண்ணீர்ல கரைஞ்சது மாதிரி ஆயிட்டுது."

"முத்தம்மா, நான் ஒன்று சொல்றேன், கேட்பியா?"

"சொல்லுங்க அய்யா!"

"அப்படியே என் மகளை நான் பார்க்க முடியாமல், இன்னைக்கே என் உயிரு போயிட்டுதுன்னா, பானுகிட்டே சொல்லு... அப்பாவுக்கு ஒன்மேல கோபம் இல்லியாம்மா. சாகும்போதுகூட ஒன்னை நெனைச்சுட்டுத்தான் செத்தா ராம்னு சொல்லு... சொல்வியா முத்தம்மா?"

"அய்யா... அய்யா... இதைவிட நீங்க என்ன கொன்னுடலாம். ஆண்டவன், என்ன என்ன வார்த்தை கேட்கும் படியா வச்சுட்டான்..."

## 5

மகளைப் பார்த்துவிட வேண்டும் என்ற வைராக்கியத்தாலோ அல்லது இயல்பாகவோ, டாக்டருடைய நாட்குறிப்பையும் தாண்டி, தணிகாசலம் மறுநாளும் பிழைத்திருந்தார். ஆனாலும் முன்பைவிட அதிகமாய் பலவீனப்பட்டிருந்தார். நீரிழிவும் ரத்த அழுத்தமும், அரசியல் கட்சிகள் போல் கூட்டணி வைத்து, அவர் உயிரை தொகுதி உடன்பாடு செய்து, துண்டாடிக்கொண்டிருந்தன. அவர் கட்டிலில் மல்லாக்கப் படுத்து சுழன்ற தலையை வைத்து சுழலாத மின்விசிறியை சுழல்வதாக நினைத்துக்கொண்டிருந்த சமயம், மகள் வருவாளோ மாட்டாளோ என்று மனம் அல்லாடிக்கொண்டிருந்த நேரம், மகளின் வருகையை

எதிர்பார்த்து வாசலை நோக்கி தலையைத் திருப்ப முடியாத பலவீனம். எதிரே தென்பட்ட முத்தம்மாவிடம், மன மிருந்தும் கேட்கமுடியாத சோகம். பலாப்பழம்போல், விம்மி இருக்கும் அவர் மேனி, புடலங்காயாய் கூம்பிக் கிடந்தது. உடம்பு ஒடுங்க ஒடுங்க, உள்ளமோ, பூதாகார மாய் பேரிரைச்சல் போட்டுக்கொண்டிருந்தது. பானுமதி, ஜட்டிபோட்ட குழந்தையாகவும் பிராக் போட்ட சிறுமியாக வும், பாவாடை தாவணி பருவத்தாளாகவும், புடவை கட்டிய பேரிளம் பெண்ணாகவும் மாற்றி மாற்றி வடிவு காட்டிக்கொண்டிருந்தாள். அவர் மனம், பிராக் போட்ட சிறுமி பானுமதியிடமே லயித்திருந்தது. அம்மாவைப் பிணமாக தேரில் வைத்தபோது, கைதட்டிச் சிரித்து, எல்லோரையும் அழவைத்த அந்த மோகன உருவத்தையே அவர், சிந்தனை சித்ரவதைக்குள் சிறைப்படுத்திக்கொண் டிருந்த வேளை.

திடீரென்று சப்தநாடிகளை ஊடுருவிய ஓலம். 'அப்பா... அப்பா...' என்ற அவல ஒலி. 'ஒங்களை இந்த கதிக்காக்கிய நான் பாவிப்பா... எனக்கு மன்னிப்பே கிடையாதப்பா...' என்று நெஞ்சே வெடித்து, வாயாய் வ வெடுத்து, வார்த்தை வடிவங்களாய் சின்னா பின்னமாய் சிதறு தேங்க. யாய், விழுந்து கொண்டிருப்பது போன்ற ஓல ஒலி. தணிகாசலம் லேசாய் முதுகை வளைத்துப் பார்த்தார்.

பானுமதி, அவர் கால் பாதங்களை கட்டிக்கொண்டு, கதறிக்கொண்டிருந்தாள். பிறகு தந்தையை, பாதாதிகேசம் வரை பாவித்து, அவர் மார்பில் தலைபோட்டு, அதை உருட் டிக்கொண்டிருந்தாள். சொல்லுக்கு சொல் அப்பா... அப்பா! வார்த்தைக்கு வார்த்தை நான் பாவிப்பா... படு பாவிப்பா... என்ற ஓலப் பெருவொலி!

முத்தம்மா, அவளைப் பிடிக்கப் போனாள். தணிகாசலமோ, அவளைக் கையாட்டி தடுத்துவிட்டு, துவண்டு கிடந்த கையை எடுத்து, அவள் தலையில்

போட்டார். உதடுகள் வெடித்தன. தூக்கிய தோள்கள் துடித்தன. எடுத்த கைகள், அவள் கழுத்தில் பட்டன. பிறகு, சன்னமான குரலில் 'மாப்பிள்ளை...' என்று சொன்னதை, பானு கேட்கவில்லை. அவள் அழுகையே, அவள் காதுக்கு தாழிட்டது.

முத்தம்மாதான் கேட்டாள்.

"கேட்டுக்கு வெளியே... அந்த பிள்ளையாண்டான் நிற்கிறார். கூட்டிட்டு வரட்டுங்களா அய்யா!"

"கூப்... கூப்" என்ற சத்தம்; மகளைப் பார்த்துவிட்ட மன நிறைவு; மருமகனைப் பார்க்க வேண்டுமென்ற ஆவல். மகள் கழுத்தில் கிடந்த மஞ்சள் கயிறு, தன் உதட்டில் பட்ட தால் ஏற்பட்ட சோகக் கலப்பான மகிழ்ச்சி. முத்தம்மாவை நோக்கி 'இன்னுமா போகவில்லை' என்பது போன்ற பார்வை. முத்தம்மா வெளியேறியபோது, பானுமதியின் ஊனை உருக்கும் ஓலங்கேட்டு, காரோட்டி பெருமாள், தோட்டக்கார துரைராஜ் உட்பட, வேலையாட்கள் உள்ளே வந்துவிட்டார்கள்.

தந்தையையும் மகளையும் அழுதழுது பார்த்தார்கள். அவர்களோ, ஒருவர் கண்ணில் இன்னொருவர் முகம் பார்த்துக்கொண்டிருந்தார்கள். இதற்குள், செல்வம் உள்ளே வந்தான். அவர் கிடந்த கோலத்தை எதிர்பார்க்காதவன் போல் திடுக்கிட்டான். பின்பு அவர் கால்களில் தன் கண் களை ஒற்றிக்கொண்டு, கைகளைக் கட்டியபடியே அவரைப் பார்த்தான். அவரைப் பார்க்க, அவன் கண்கள் வேர்த்தன. அவரோ அவனையும், மகளையும் அடுத்தடுத்து பார்த்தார். பிறகு மகள் கையைப் பிடித்து செல்வத்தின் கையில் கொடுக்கப் போனார். அழுகையைக் கேவலாக்கிய பானு, மீண்டும் குய்யோ முறையோ என்று கூப்பாடு போட்டாள். செல்வம் அவளை ஆதரவாகப் பிடித்துத் தன் தோளோடு தோளாய் அணைத்துக்கொண்டான். அதைப் பார்த்த திருப்தியில் தணிகாசலம் புன்னகைப்பது போலிருந்தது.

திடீரென்று ஸ்கூட்டர் சத்தம். அதிலிருந்து மனைவி யுடன் இறங்கிய பாஸ்கரன் வேகமாய் உள்ளே வந்தான். அண்ணனைப் பார்த்ததும், ஆற்றமுடியா துக்கத்தோடு அவனைக் கட்டிப் பிடிக்க வந்த பானுமதியிடமிருந்து விலகிய படியே அவன் கர்ஜீத்தான்.

''ஒன்னை யார் இங்கே வரச்சொன்னது? ஒன்னாலேயே என் அப்பாவுக்கு உடம்பு இப்படி ஆயிட்டுது! அவரை தேற்றுவதற்கு நான் படாத பாடு பட்டுகிட்டு இருக்கேன். இந்தச் சமயத்தில இருக்கிற உயிரையும் எடுக்கவா வந்தே? சதிக்காரி! மானங் கெட்டவள்! கெட் அவுட்...ஐ சே கெட் அவுட்...ஒன்னைத்தான்...ஒன் புருஷனை கூட்டிட்டு மரியா தையாய் வெளியேறு...''

தணிகாசலம், மகனைப் பார்த்து ஏதோ சொல்லப் போனார். கை கால்களை ஆட்டப் போனார். அவன் அவரைக் கவனித்ததாகத் தெரியவில்லை. கூப்பாடு போட் டான். கெட் அவுட்...அவுட் என்றான்.

எதுவுமே நடக்காததுபோல் கைகளைக் கட்டியபடி தலை தாழ்த்தி நின்ற செல்வத்தைப் பார்க்கப் பார்க்க அவனுக்கு ஆத்திரம் அசிங்கமான வார்த்தைகளாய் வந்தன.

''ஏய் ஸ்கவுண்ட்ரல்... என் அப்பாவைக் கொல்றதுக்கா வந்தே...''

அண்ணனின் வார்த்தைகளை காதில் வாங்காமல், பெற்ற பாசப் புயலில் சிக்குண்டிருந்த பானுவுக்கு, அவன் வார்த்தைகள் லேசாய் உறைத்தன. மெள்ள அடித்தொண் டைக் குரலில் கேட்டாள்.

''நீ பேசறது ஒனக்கே நல்லா இருக்குதா அண்ணா?''

''அண்ணான்னு சொல்லாதடி அடங்காப்பிடாரி... முத்தம்மா இவங்களை ஏன் உள்ளே விட்டே?''

''பெற்ற மகளை... சாகப்போகிற அப்பாகிட்டே விடாமல் இருக்கிறதுக்கு நான் ஒன்றும் மிருகமில்ல. அரக்கி இல்ல... நாயில்ல... பன்றியில்ல...''

''ஒன்கிட்ட எனக்கென்ன பேச்சு...யோவ் செல்வம், ஒன் பெண்டாட்டியைக் கூட்டிட்டு மரியாதையாய் வெளியே போறியா... இல்ல கழுத்தைப் பிடிச்சு நானே தள்ளணுமா?''

செல்வம், அவனுடைய வார்த்தைகளை உள் வாங்காமல், கட்டிய கைகளை விலக்காமல், மாமனாரை நோக்கிய விழிகளைத் தாழ்த்தாமல் நின்றான். தணிகாசலம் ''போயிடாதிங்க...'' என்ற வார்த்தைகளை உதடுகளால் ஓசையின்றி உச்சரித்து, திரையிட்ட கண்களால் தீவிர சோகத்தோடு பார்த்துக்கொண்டே இருந்தார்.

பாஸ்கரன் அதட்டினான்.

''யோவ் ஒன்னைத்தான்...தானா போறிங்களா...நானா போக வைக்கணுமா...''

சில்லிட்டவளாய் நின்ற பானு, சிலிர்த்து எழுகிறாள்.

''எங்களைப் போகச்சொல்ல நீ யார்?''

''என்ன சொன்ன...''

''என்னைப் போகச்சொல்ல நீ யாருன்னேன்? இது என்னோட அப்பா... இது நான் பிறந்த வீடு... இன்னும் சொல்லப்போனால் என் பெயர்ல பதிவாகியிருக்கிற வீடு... ஒன்னை நான்தான் போகச் சொல்லமுடியுமே தவிர, நீ என்னைப் போகச் சொல்ல முடியாது!''

பாஸ்கரனால் பதிலளிக்க முடியாமல், கோபம் வந்தாலும், கொப்பளிக்க வார்த்தைகள் கிடைக்கவில்லை. இதுக்குத்தான் இந்தக் கிழவனை உயிலை மாற்றச் சொன்னேன். கிழவர் சம்மதிக்கப்போகிற சமயத்தில் இந்த கிராதகி வந்துட்டாள். என்னமாய் மகளைப் பார்க்கிறார்!

இனிமேல் இந்த வீடும் அம்பத்தூர் பேக்டரியும் வந்தாப் போலதான்! பானு, அண்ணனை முறைத்தபடியே, கண் களை எடுக்காமல் கற்சிலையாய் நின்றாள். பதிலளிக்க முடியாத பாஸ்கரன், இடுப்பில் கைவைத்தபடி பின்னால் நின்ற மனைவியை மருவி மருவிப் பார்த்தான். அவள், அவன் இடுப்பை யாருக்கும் தெரியாமல் கிள்ளி, கண்களை சிமிக்கிச் சிமிக்கி, கையை ஆட்டி முன்னால் வந்தாள்.

"ஒங்களுக்கு கொஞ்சமாவது மூளை இருக்குதா? சொந்த தங்கையை, கூடப்பிறந்த தங்கையைப் பார்த்தா இந்தக் கேள்வி கேட்கிறது? அவளுக்கு இல்லாத வீடு ஒங்க ளுக்கு எப்படி வந்துட்டுது. அவள் கேட்டதுல என்ன தப்பு? மாமாவுக்கு நீங்க மட்டுந்தானா பிள்ளை? அப்படி யாராவது வெளியேற வேண்டுமுன்னால், அது நீங்கதான். சீ... கொஞ்சமாவது பாசத்தோட பேசத் தெரியணும்..."

பானு, அண்ணியைக் கட்டிப் பிடித்துக்கொண்டு, ஒப்பாரியிட்டாள்; "அண்ணி... அண்ணி... நான் தாய்க்குத் தாயாய் நினைக்கிற அண்ணி...நீங்க அண்ணியில்லை... எனக்கு தாய்... தாயேதான்..." என்று அரற்றினாள். மைதிலியின் மார்பில், முகம் புதைத்து கழுத்தில் கை போட்டு புலம்பினாள். அண்ணிக்காரி, தன்னருகே வந்த தன் சொந்த மகளை தலையைத் தடவியபடியே, மைத்துணியின் முதுகைத் தட்டிக்கொடுத்தபடி ஆற்றுவித்தாள்.

"அழாதம்மா... இந்த அண்ணி இருக்கும்போது நீ எதுக்கு அழணும்? உங்க அண்ணனைப்பற்றி ஒனக்கு தெரியாதா! முரடுலையும் முரடு...சரியான முரடு. வாய்க்கும் மனதுக்கும் சம்பந்தமில்லாத பிறவி! வேணுமின்னால் பாரு... ஒன்கிட்டேயே அப்புறமாய் மன்னிப்புக் கேட்பார். தங்கச்சி, வேற ஜாதிக்காரரை கல்யாணம் செய்து, அப்பா படுக்கையில விழக் காரணமாயிட்டாளேன்னு ஆத்திரத்தில

பேசிட்டார். தங்கை வாழ்க்கையைக் கெடுத்துட்டாளே என்கிற கோபம். இதுக்கும் அன்புதான் அடிப்படைக் காரணம். விட்டுத் தள்ளும்மா...''

பானுமதி, கண்களைத் துடைத்துக்கொண்டாள் மைதிலி, பாஸ்கரனைக் கிள்ளியதையும், கண்களால் குறிப் புணர்த்தியதையும், எதேச்சையாக அந்த நிலையிலும் பார்த்து படபடத்தார் தணிகாசலம்.

''அவளை நம்பாதிங்க... ஏதோ திட்டம் போட்டு பேசறாள்'' என்று மகனைப் பார்த்துப் பேசப் போனார். முடியாதுபோகவே, தன்னையே தவிப்போடு பார்த்த மருமகனிடம் சமிக்ஞை செய்யப் போனார். உள்ளம் நினைத்தாலும் உடல் அதுக்கு உருக்கொடுக்க மறுத்தது. பிரம்மப் பிரயத்தனம் செய்தும், அவரால் முடியவில்லை. மகனை நோக்கிக் கையெடுத்துக் கும்பிடப் போனார். மருமகளைக் கண்களால் கெஞ்சப்போனார். எதுவுமே எடுபடவில்லை, இறுதியில் இயலாமையில் தவித்து, ''பா...பா...என்ற கோரக் குரலிட்டபடியே, எங்கோ கண்கள் மொய்த்து, பிறகு மூடிக்கொண்டன. வாய் சொல்லமுடியாத தோல்வியில், திறந்து கிடந்தது. கைகள் சமிக்ஞை செய்யமுடியாத ஏமாற்றத்தில் துடித்துக் கொண்டிருந்தன.

இதுவரை, அழாமல் நின்ற செல்வம், வாய்விட்டுக் கதறினான், எதிரே தென்பட்ட முத்தம்மாவைக் கட்டிப் பிடித்தபடியே, கண்ணீர் விட்டான். பானு ஸ்தம்பித்து நின்றாள். மைதிலி வாய்விட்டு அழுதாள்.

# 6

அப்படியும், தணிகாசலத்தின் உயிர், இரண்டுநாள் உடலோடுதான் கிடந்தது. அப்புறம் அவரும் முடிந்து, அதற்கான காரியங்களும் முடிந்து, ஒரு வாரத்திற்கு மேலாகி

விட்டது. அவ்வப்போது 'அப்பாவைக் கொன்னுட்டனே... நானே கொன்னுட்டனே...' என்று செல்வத்திடம் அரற்றிய பானு, குற்ற உணர்வில் இருந்து மீண்டுகொண்டிருந்தாள். அண்ணன் பாஸ்கரனும், "நீ என்னம்மா செய்வே. காக்கை உட்காரப் பனம்பழம் விழுந்த கதைதான்" என்று சொன்னதில் லேசான ஆறுதல்.

பானுவும், செல்வமும் மாடியில்; பாஸ்கரனும் மைதிலியும் கீழே; மற்றபடி சாப்பாடு வரவு செலவு எல்லாம் ஒன்றாகத்தான். அன்றைக்கும் செல்வம் சாப்பாட்டுப் பொட்டலத்தை கைப்பைக்குள் போட்டபடி, டைப்பிஸ்ட் வேலைக்கு புறப்பட்டுக் கொண்டிருந்தான். குளித்துவிட்டு ஈரத்துணியால், கொண்டையைக் கட்டிப் போட்டபடி வந்த பானு, அவன் தோள்பட்டையில் கிடந்த துரும்பைத் தட்டி விட்டுவிட்டு, முட்டி கைகளில் படிந்திருந்த சுண்ணாம்புக் கோலத்தை, முந்தானையால் தேய்த்துவிட்டபடியே கேட்டாள்:

"நான் சொல்றது ஒங்க காதுல உறைக்கவே செய்யாதா..."

"நெனச்சேன்... இன்னைக்கு இதுவரைக்கும் குண்டு போடாமல் இருக்கியேன்னு..."

"எத்தனை நாளைக்கு இந்த டைப்பிஸ்ட் உத்தியோகத்தைக் கட்டிட்டு அழப்போறீங்க!"

"கட்டிட்டு இருக்கேன்... ஆனால் அழல!"

"என்ன டியர் நீங்க... அம்பத்தூர் பேக்டரி நிர்வாகம் சரியில்லாமல் லாஸில் போகத் துவங்கிட்டதாம்! அண்ணனுக்கு சினிமா தியேட்டரையும், கிண்டி ரேஸையும் கவனிக்கவே நேரம் இல்ல. நீங்களாவது பேக்டரி பொறுப்பை ஏற்று நடத்தப்படாதா. பேக்டரி லாஸானால், அப்புறம் வீடே லாஸாகிடும்!"

''ஒனக்கு எத்தனவாட்டி சொல்றது மேடம்! பிளீஸ்... என்னை ஒங்க சொத்துபத்து வம்புல இழுக்காதே! ஒன் பாடு, ஒன் அண்ணன் பாடு. எனக்குக் கிடைச்ச இந்த ஹஸ்பென்ட் உத்தியோகமே போதும்மா!''

''சும்மா மழுப்பாதிங்க. எனக்கு ரெண்டுல ஒன்று இன்னைக்குத் தெரியணும். நீங்க நம்ம பேக்டரி பொறுப்பை எடுத்துத்தான் ஆகணும்.''

''நான் டைப்பிஸ்ட் வேலை பார்க்கிறது ஒனக்குக் கேவலமாய் தெரியுதா?''

''இதுல இருந்து என்னைத்தான் நீங்க கேவலமாய் நினைக்கற மாதிரி தெரியுது.''

''நெவர்...நெவர்...''

''நான் ஒங்களைத்தான் கட்டினேன்...ஒங்க டைப்பிஸ்ட் பதவியை இல்ல!''

''நானும் ஒன்னைத்தான் கட்டினேன்...ஒன் அம்பத்தூர் பேக்டரியை இல்ல.''

''எனக்கும், என் புருஷன் டிப்டாப்பாய் டிரஸ் போட்டு, கார்ல போய்... ஒரு பெரிய நிர்வாகியாய் இருக்கணுங்கற ஆசை இருக்காதா? இல்ல இருக்கத்தான் கூடாதா?''

''இதுக்குப் பெயர்தான் ஆளுமை உணர்வு. இது கூடவே கூடாது. இப்போ நாட்ல பலர் பதவிக்காக, நாக்கைத் தொங்கப் போட்டுட்டு அலையறாங்க... பதவியில் கிடைக்கிற போலி மரியாதைக்காக, சுயமரியாதையையே விட்டுக்கொடுக்கத் தயாராக இருக்காங்க. சத்தியமாய் சொல்றேன். எனக்கு அமைச்சர் பதவி கொடுத்தால்கூட, நான் ஏத்துக்கமாட்டேன்.''

''சரியான ஆளு! யாரோ கொடுக்கப்போறது மாதிரி!''

"கொடுக்கவும் வேண்டாம். என் டைப்பிஸ்ட் பதவியை கெடுக்கவும் வேண்டாம். சரி நான் புறப்படட்டுமா..."

"ஒங்களைக் கடவுளாலயும் திருத்த முடியாது!"

"கடவுளே இப்போ திருத்தத்துக்கு உரியவராகிறார்!"

"அப்போ... அம்பத்தூர் பேக்டரியை..."

"நிச்சயம் ஏற்றுக்க மாட்டேன்! நீயே, ஏன் ஏற்றுக்கக் கூடாது?"

"நான் பெண்ணாய் பிறந்து தொலைச்சுட்டேனே..."

"இந்த நாட்டோட பிரதமரே பெண்தான்!"

"ஒங்க மனசுல என்னதான் நெனைப்பு..."

"பானு கண்ணு... என்னை என் வழில விடுப்பா. நான் சொத்துக்கு ஆசைப்பட்டு ஒன்னைக் கட்டல. பேக்டரி நிர்வாகத்தை ஏற்றுக்கிட்டால், அப்புறம் என் பானு கண்ணுகிட்டே பேசக்கூட டயம் கிடைக்காது. என் வாழ்க்கை, பேக்டரி நிர்வாகத்தோட பெரிது. அந்தப் பெரிய வாழ்க்கையைவிட, என் பானு டார்லிங் ரொம்ப பெரிசு. மகிழ்ச்சியை விலையாய்க் கொடுத்து, பொறுப்பை எடுத்துக்க நான் தயாராய் இல்ல. தயவுசெய்து என்னை வற்புறுத்தாதே மேடம்!"

பானு, அவனிடம் கோபமாக ஏதோ சொல்லப்போன போது, முத்தம்மா வந்தாள்.

"என்ன முத்தம்மா!"

"பாஸ்கரன் அய்யா என்னை வேலையில் இருந்து நிற்கச் சொல்லிட்டார்."

"ஒன்னையா... எதுக்காம்?"

"அதுக்கான காரணத்தைச் சொன்னால், என்னை ராமாயண கூனியாய் நினைப்பாங்க. அவருக்கு என்மேல ஆயிரம் சங்கடம். நிறுத்திட்டார். அம்மாகிட்டேயும் சொல்லிட்டுப் போகலாமுன்னு வந்தேன்."

''சொல்லு. அதுக்காக போகாதே! இருபது வருஷமாய், இந்த வீட்டுக்குத் தொண்டு செய்த ஒன்னை, நிறுத்த யாருக்கும் உரிமை இல்ல. வா, நானே அண்ணன்கிட்டே கேட்கிறேன்!''

''எதுக்கும்மா என்னால ஓங்களுக்குள்ள தகராறு! ஏதோ என் தலைவிதி!''

''நீ பேசாமல் என் பின்னால் வா முத்தம்மா. நியாயத்துக்கு அண்ணன் தம்பி கிடையாது.''

''பானு கணவனோடும், முத்தம்மாவோடும் கீழே இறங்கியபோது, பாஸ்கரன் கழுத்தில் டையைக் கட்டிக் கொண்டிருந்தான். பானு யதார்த்தமாய் கேட்டாள்.''

''பாவம்... முத்தம்மா அண்ணா... இந்த வயசுல அவள் எங்கண்ணா போவாள். வேலையை விட்டு நிறுத்திட்டியாமே!''

''ஆமாம். அவள் போக்கு சரியில்ல.''

''இருபது வருஷமாய் வேலை பார்க்கிற ஜீவன்... எதுல அவள் சரியில்ல!''

''எனக்கு பிடிக்கல. நிறுத்துறேன்!''

குடும்ப விவகாரத்தில் தலையிடுவதில்லை என்று கங்கணம் கட்டிக்கொண்டிருந்த செல்வத்தால் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள முடியவில்லை.

''காரணத்தைச் சொல்லி நிறுத்தினால், அவங்க திருந்திடுவாங்க. அப்படியும் திருந்தலன்னா நிறுத்தலாம். ஏதோ ஆடு மாடை விரட்டுறது மாதிரி விரட்டுறது மனிதாபிமானமில்ல அததான்!''

''மாப்பிள்ளை இதை நீங்க கண்டுக்கப்படாது!''

''என்னை நீங்க இந்த வீட்டைவிட்டு நிறுத்தினால் கண்டுக்கமாட்டேன்! பட் ஒரு ஏழையை நிறுத்துறது என்கிறது...''

''ஒரு வேலைக்காரியை நிறுத்தக்கூட எனக்கு உரிமை இல்லையா?''

பானு குறுக்கிட்டாள்.

''முத்தம்மாவை வேலைக்காரியாய் நினைக்கப்படாதண்ணா... நம்மை எடுத்து வளர்த்தவள்.''

''அதுக்காக...''

''அவளை அந்தத் தாயை நிறுத்த, ஒனக்கோ எனக்கோ உரிமை கிடையாது.''

''நீ வரம்புமீறி பேசுறே பானு! வரவர ஒனக்கு அண்ணன் என்கிற மரியாதை இல்ல!''

''என்னண்ணா நீ... ஒனக்கு மரியாதை கொடுக்காமல், நான் யாருக்குக் கொடுப்பேன். முந்தாநாள்கூட என்னை இவரு முன்னாலேயே அடிக்க வந்தே... ஏதாவது கேட்டேனா?''

''ஒன்னை அடிக்க உரிமை இல்லையா?''

''நிச்சயம் உண்டு. ஆனால் முத்தம்மாவை நிறுத்துறதுக்கு இல்ல.''

''அதாவது... இந்த வீடு ஒன் பேருக்கு இருக்கறதுனால, எனக்கு உரிமை இல்லங்கற.''

''ஒன்கிட்டே மனுஷி பேசுவாளா... அண்ணி, அண்ணி... கொஞ்சம் இந்தப் பக்கம் வாறீங்களா...''

''பாருங்கண்ணி இந்த முரட்டுத் துரையை... முத்தம்மாவை வேலையில் இருந்து நிறுத்துறேன்றாரு. நான் வேண்டான்னால், என்னவெல்லாமோ பேசுறாரு.''

மைதிலி தலையில் அடித்துக்கொண்டே ஓடி வந்தாள்.

''ஆரம்பிச்சுட்டீங்களா... அண்ணன் தங்கை போரை! இதோ பாருங்க, ஒங்களைத்தான். முத்தம்மா நமக்கு தாய் மாதிரி, அவளை ஏன் நிறுத்துறீங்க...''

"எப்படியோ தொலைஞ்சு போங்க. நான் யாரையும் இனிமேல் நிறுத்தல."

மைதிலி, முத்தம்மாவுக்கு ஆணையிட்டாள்.

"முத்தம்மா... ஏன் பிராக்கு பார்க்கிற? போய் வழக்கமாய் செய்யுற வேலய பாரு. அவரு குணந்தான் ஒனக்குத் தெரியுமே... என்கிட்டே சொல்லியிருந்தால் நானே முடிச்சிருப்பேன். நீ ஏன் அண்ணன் தங்கைக்கு இடையில் கலகம் மூட்டுறே?"

"தப்புத்தாம்மா..."

"சரி சரி ஒன் வேலையை போய்ப் பாரு. பானு! ரெடியாயிட்டியா? நல்லிக்கு போகணுமுன்னு சொன்னேனே மறந்துட்டியா."

"இதோ அண்ணி!"

செல்வம், திருப்தியோடு புறப்பட்டான். பாஸ்கரன், முகத்தைத் திருப்பிக்கொண்டான். முத்தம்மா, மைதிலி முகத்தை ஆழப் பார்த்தபடியே, துடைப்பத்தை எடுத்தாள்.

# 7

இரவு வந்தபோது, பாஸ்கரனுக்கு கோபமும் வந்தது. கழுத்தில் கைபோட்ட மனைவியை, முரட்டுத்தனமாய் தள்ளிவிட்டு, அவன் வேறு பக்கமாய் புரண்டு படுத்தான். மைதிலி அவனை பலவந்தமாய், தன் பக்கம் திருப்பப் போனாள். முடியவில்லை. பிறகு சிரித்தபடியே எழுந்து, கட்டிலின் மறுபுறம் போய், அவன் முகம் நோக்கிப் படுத்தாள். அவன் மீண்டும் மனைவிக்கு முதுகைக்காட்டப் போனபோது, அவள் அவன் தலைமுடியைப் பிடித்திழுத்தாள், பாஸ்கரன் கோபமாகக் கேட்டான்.

''நீ ஒன்றும் என்கிட்டே கொஞ்ச வேண்டாம்...''

''ஏன், கொஞ்சறதுக்கு ஒங்களுக்கு வேற ஒருத்தி கிடைச்சிருக்காளா?''

''ஒன் புத்தி சந்தேகப் புத்தி! ஒன்னை விட்டுப் போகுமா?''

''வலிய வாற மனைவியை உதறுற நீங்கல்லாம் ஒரு புருஷனா?''

''சொல்றபடி செய்யுற புருஷனை, காலை வாரிவிடுற நீயெல்லாம் ஒரு மனைவியா?''

''நான் மட்டும் ஒங்களுக்கு பெண்டாட்டியாய் வரா விட்டால் இந்நேரம், பானு ஒங்களை பந்தாடியிருப்பாள். ஞாபகம் இருக்கட்டும்.''

''ஞாபகம் இருக்கறதாலதான் கேட்கிறேன். ஆமாண்டி, தெரியாமல்தான் கேட்கேன். ஒன் மனசுல என்னதான் நினைச்சுகிட்டு இருக்கே. அப்பாவைப் பார்க்கவிடாமல் பானுவை தடுக்கச் சொன்னதும் நீதான். அப்புறம் எல்லார் முன்னாலயும், என்னை முட்டாளாக்கிட்டே, பொறுத்துக் கிட்டேன். இன்னைக்குக் காலையில் முத்தம்மாவை நிறுத்தச் சொன்னதும் நீதான். அப்புறம் என்னை அசடாக் கிட்டே. ஒன்னால எனக்கு எவ்வளவு அவமானம் பாரு. எனக்குப் பிறகு பிறந்தவள், நான் மிச்சம்வச்ச எச்சிப்பாலை குடிச்ச பானுமதிகிட்டே தோற்றுவிட்டேன். அவள்கிட்டே தோற்றது பரவாயில்லை. கேவலம் வேலைக்காரி முத்தம்மா கிட்டே முழுசாய் தோற்றுவிட்டேன். என்னை இந்த பாடு படுத்துறதுல, ஒனக்கு ஏண்டி இவ்வளவு ஆசை! இதுக்கெல் லாம் இப்பவே பதில் சொல்லணும்!''

''ஒங்க தங்கச்சி என்னை கிள்ளுக் கீரையாய் நினைக்கற மாதிரி, நீங்களும் என்னை நினைக்காதிங்க. ஒங்களுக்கு ஒரு அவமானமுன்னால் அது எனக்கும் சேர்த்துதான். மறந்திடாதிங்க.''

''ஒன்னை புரிஞ்சிக்கவே முடியலடி.''

''பொறுத்துப் பாருங்க அத்தான். ஒரு காயை நகர்த்தும் போது, ஒங்க தங்கச்சி இன்னொரு காயை நகர்த்தறாள். பார்த்துடலாம். விளையாட்ல ஜெயிக்கப்போறது என் புருஷனா, அவள் புருஷனா, பார்த்துடலாம்...''

''நீ என்ன சொல்ற...''

''நான் எதையும் சொல்றவள் இல்ல. செய்யுறவள். என் புருஷனுக்கு இணையாய், அந்தப் பரதேசிப்பயல் செல்வத்தை ஆக்குறதுக்கு முயற்சி செய்யுற பானுவோட திட்டம் பலிக்குதா? இல்ல என் புருஷனை எல்லாச் சொத்துக்கும் ஏகபோகியாய் மாற்ற நினைக்கிற என்னோட திட்டம் பலிக்குதான்னு பார்த்துடலாம்!''

''கொஞ்சம் விவரமாகத்தான் சொல்லேன்பா...''

''ஒரு திட்டத்தின் வெற்றிக்கு அதை ரகசியமாய் வச்சுக்கிறதுதான் முக்கியம். பொறுத்துப் பாருங்க. எல்லாம் நல்லாவே முடியும்.

''பானு போடுற ஆட்டத்தைப் பார்த்தியா?''

''எல்லாம் ஓங்கப்பன் கிழவன் பார்த்த வேலை. நல்ல வேளையாய் செத்துட்டான். அதனால என் புருஷன் அனாதையாகல. அவனை அப்படி ஆக்கப்போறவங்களை நான் விடவேமாட்டேன்!''

''ஒனக்கு என்மேல இருக்கிற பாசம் புரியுதுடி...அவன் இவன்னு ஏண்டி பேசறே!''

''ஸாரி...அதுக்கு அபராதமாய் ஒரு முத்தம் கொடுக்கட்டுமா?''

''சொல்லாதே!''

கணவனை முத்தமிட்ட மைதிலி, திடீரென்று எழுந்தாள். விளக்கைப் போட்டாள். வெளிச்சத்தில் நெளிந்த மூட்டைப் பூச்சிகள், ஒவ்வொன்றையும் சுவைத்து நசுக்கிக் கொன்றாள்.

# 8

ஒரு மாதம் ஓடிவிட்டது.

அன்று இரவு மணி பதினொன்று இருக்கலாம்.

தூங்கிக் கொண்டிருந்த செல்வம், ஒரு குலுக்கலோடு எழுந்தான். ''என்ன சத்தம்'' என்று சொன்னபடியே படுக்கையில் மனைவியைப் பார்த்தான். அவளைக் காண வில்லை. ''பானு... பானு'' என்று சொன்னபடியே ஸ்விட்சைப் போட்டான். பானு இருந்த கோலத்தையும் கீழே கேட்ட சத்தத்தையும் கண்ணாலும், காதாலும் உள் வாங்கிக் கொண்டவனுக்கு ஒன்றும் புரியவில்லை.

நைட் கௌனோடு, கீழே தரையில் மூலையில் சாய்ந்து தலையில் கைவைத்தபடி உட்கார்ந்திருந்த பானு. பார்த் தாளே தவிர, பதிலளிக்கவில்லை. செல்வம் ஓடிப்போய் அவளைத் தூக்கி நிறுத்தி, படுக்கையில் உட்கார வைத்து விட்டு, அருகே அமர்ந்தான்.

''ஏன் பானு, ஒரு மாதிரி இருக்கே?''

''கீழே போடுற சத்தம் ஒங்க காதுல உறைக்கலியா?''

''இல்ல. கர்ணன். எனக்கு வந்த தூக்கம் ஒனக்கும் வரணும் என்று நினைக்கிறவன். இந்தச் சத்தத்தையே தாலாட்டாய் நெனச்சுட்டு தூங்கலாம்.''

''நானும் எத்தனையோ சத்தத்துல தூங்குனவள் தான்.''

''பிறகு ஏன் இப்போ...''

''பொறுப்பை உணராத ஓங்ககிட்டே நான் என்னத் தைச் சொல்ல...''

''பொறுப்பு என்கிறது வேற, ஆசைப்படுறது என்கிறது வேற மேடம்.''

''என்னமோ...என்னால தூங்க முடியல!''

''சுலபமாய் தூங்குறதுக்கு ஒரு வழி சொல்லித் தரட்டுமா? உடம்புல இருபத்தேழு சென்டர் இருக்குது. இவற்றை வசியப்படுத்த ஒரு வழி.''

''மொத்தத்துல, இந்த சத்தத்துக்கான வழி தெரியுமா உங்களுக்கு?''

அப்போதுதான் செல்வமும் உற்றுக் கேட்டான். கீழே 'ஆஹா...ஓஹோ' என்ற ஓங்கார கூச்சல். சோடா பாட்டில்கள் 'உஷ்' சத்தத்துடன் உடைந்துகொண்டிருந்தன. சிக்கன்—சிக்ஸ்டி சிக்ஸ் தீர்ந்து போச்சுதா என்ற தின்னிக் குரல்கள். ''இன்ஸ்பெக்டர் சாருக்கு இன்னும் கொஞ்சம் போடுங்க, என்ற காக்கா குரல்; பாஸ்கரன், போதையில் நாக்குழறி, ''இந்த பாஸ்கரன், நட்புக்காக என்னவேணுமுன்னாலும் செய்வான். ஏய்... மைதிலி பிரிட்ஜை திறந்து கேஸ்டி எடு. தப்பு தப்பு. ஒரு கேஸ் எடு. இன்ஸ்பெக்டர் திம்மையாவுக்கு என்னவேணுமுன்னாலும் செய்யலாம். டேய் சீதாராம், போடுடா...நான் இருக்கேண்டா...போடுடா!''

திடீரென்று பட்டுபட்டென்ற சத்தம். பாஸ்கரன் நண்பர்களுக்காகவே தான் இருப்பதாகவும் மார்தட்டும் சத்தம். புதிய பாஸ்கரனையும், புதிய சூழலையும் கண்டுவிட்ட ஆதங்கத்தில், செல்வம், தன் மடியில் சாய்ந்த பானுவின் தலையை உருட்டியபடியே, அசைவற்று இருந்தான். திடீரென்று கதவு தட்டும் சத்தம். பானு எழுந்து கதவைத் திறந்தாள். பாஸ்கரன் மகள் பாமா, ''அத்தெ, அத்தே, நான் இங்கேயே படுத்துகிறேன் அத்தே'' என்றபடி கண்

களை கசக்கிக்கொண்டு நின்றாள். பானு அவளை வாரி யெடுத்துக்கொண்டு, கதவைத் தாழிட்டாள். பிறகு கணவனை உஷ்ணமாகப் பார்த்தபடி நின்றாள்.

"என்ன பானு இப்படி குதியாட்டம்? ஆமா... ஏன் முகத்தை திருப்புறே? நான் என்னமோ இதுக்கு ஏற்பாடு செய்தது மாதிரி..."

"கிட்டத்தட்ட அதேதான்."

"ஏய்..."

"சிலர் செய்து கெடுப்பாங்க. சிலர் செய்யாமல் கெடுப் பாங்க. தான்தோன்றி போக்கைப் பார்த்தும் பார்க்காதது மாதிரி இருக்குறது, தான்தோன்றித்தனத்தைவிட மோச மானது!"

"என்னோட தத்துவம் ஒனக்கு வந்துட்டுது. அதனால கோபம் எனக்கு வரும்."

"நீங்க கோபப்பட்டால், நான் எவ்வளவோ சந்தோஷப் படுவேன். கேட்கிறிங்களே கீழே நடக்கிற கூத்தை. லோகல் சப்-இன்ஸ்பெக்டருக்கு பதவி உயர்வாம். அதுக்கு ஒங்க அருமை மைத்துனன் கொடுக்கிற பார்ட்டியாம் இது.

முத்தம்மாள்தான் சொல்லிட்டுப் போனாள். முன்னால ஒருநாள் இப்படிச் செய்தான். அப்பா கண்டிச்சார். சொத்தை கோவிலுக்கு எழுதி வச்சிடுறதாய் மிரட்டினார். அப்போ அடங்கிவிட்டான். இப்போ அதையெல்லாம் கணக்குவச்சு பார்ட்டி பார்ட்டியாய் ஆடுறான்!"

"ஏதோ இன்னைக்கு பார்ட்டின்னு...போகட்டும் விடு."

"இன்னைக்கு மட்டுமான்னால் நான்கூட கண்டுக்க மாட்டேன். அப்பா செத்தபிறகு இது பத்தாவதோ, பதினைஞ்சாவதோ தெரியல. இவ்வளவு நாளும் பகலுல நடக்கும். இன்றைக்கு நைட்ல. நாளையில் இருந்து பகலுல யும், நைட்லயும் நடந்தாலும் ஆச்சரியமில்லை!"

''ஒங்க அண்ணி ஏன் இதையெல்லாம் அனுமதிக்கிறாள்?''

''அதுதான் எனக்கும் புரியல!''

பானுவின் கையைப் பிடித்துக்கொண்டு நின்ற பாமா, ''அம்மாவும். அவங்களோட சேர்ந்து குடிச்சுட்டு தலையை பம்பரம் மாதிரி ஆட்டுறாள். அதனாலதான் பயந்து வந்துட்டேன்.'' என்று சொல்லிவிட்டு, இருவரையும் உயரமாய் பார்த்தாள்.

பானு, கணவனைப் பொருள்பட பார்த்தாள். அண்ணன் குடிப்பதை, இதுவரை அண்ணி, ஒப்புக்குக்கூட கண்டிக்காததை, அவள் யோசித்துப் பார்க்கிறாள். நினைக்க நினைக்க அவளுக்கு அழுகை வந்தது. கீழே குனிந்து உட்கார்ந்து, அண்ணன் மகளை தோளில் சாய்த்துக் கொண்டாள். பிறகு தன் பாட்டுக்கு அழுகைக் குரலில் பேசினாள்.

''தினமும் இந்த வீட்ல பார்ட்டியாய் போச்சு. அதுவும் விஸ்கி பார்ட்டிதான். அண்ணன் அசல் குடிகாரனாயிட்டான். குடிச்சுட்டு ரேஸுக்கு போறதும், ரேஸுல தோற்ற துக்கத்தை மறக்க, குடிக்கறதும் அவனுக்கு வாடிக்கையாய் போயிட்டு. போனவாரம் ரேஸ்ல செமத்தையா விட்டுட்டானாம். பாலவாக்கத்துல இருபத்தஞ்சு கிரவுண்டை விற்றுட்டாராம். இது எதுல கொண்டுவிடப் போகிறதோ தெரியல. காலையில் பேக்டரி மானேஜர் வந்திருந்தார். பேக்டரி பணத்தையும், அண்ணன் எடுத்துச் செலவழிக்கிறாராம். பேக்டரி லாஸ்ல ஓடத் துவங்கிடுமா! இதைவிட அதை நீங்க இழுத்து மூடிடலாம். நாளைக்கு நீங்க என்மேல குறை சொல்லக் கூடாதென்று, சொல்றேன்'னு சொல்லிட்டுப் போனார். அண்ணன் பாலவாக்கத்தைக் கடித்து, சினிமா தியேட்டரைக் கடித்து, கடைசில பேக்டரியையும் கடிக்கப்போறார். எல்லாரும் தெருவுல நிற்கப்போறோம்! நீங்க நல்லா வேடிக்கை பார்க்கலாம்.''

''என்ன பானு நீ! அண்ணன் குடித்து உடம்பைக் கெடுத்துக்கிறாரேன்னு கவலைப்படுறேன்னு நெனைச்சேன்! கடை-சில பேக்டரி போயிடுமேன்னுதான்...''

''என்ன இன்னும் ஒங்களால புரிஞ்சுக்க முடியலியா? இல்ல என்னாலதான் ஒங்களுக்குப் புரியவைக்க முடியலியா? அண்ணன் குடிச்சு, உடம்பைக் கெடுக்காரேன்னு எந்தத் தங்கையாவது கவலைப்படாமல் இருப்பாளா? அந்தக் கவலையில், சொத்தும் அழியுதென்னு இன்னொரு கவலையும் வந்தால், அதுல என்ன தப்பு? அவனைக் கண்டிக்க ஆளில்லாமல் போயிட்டு. அதனாலதான் இந்த ஆட்டம்.''

''சரி நான் போய் ரெண்டு அதட்டல் போட்டுட்டு வரட்டுமா.''

''ஒங்களுக்கும் வாய்ல பலவந்தமாய் ஊற்றிவிடுவான். நீங்க கீழே போனால் அவன் மீண்டும் வீம்புக்குத்தான் குடிப்பான். வேறுவிதமாய் அவனைப் பிடிக்கணும்.''

''எப்படி?''

''அம்பத்தூர் பேக்டரி பொறுப்பை நீங்க ஏற்றுக்கணும்.''

''ஆரம்பிச்சுட்டியா...அதிகார போதை, குடி போதையை விட மோசமானது!''

''பொறுப்பற்ற தனம். இந்த ரெண்டு போதையையும் விட பெரிய போதை. என் முகத்தைக்கூட நீங்க பார்க்க வேண்டாம். இதோ என் அண்ணன் மகள் முகத்தைப் பாருங்க. நாளைக்கு, அண்ணா எல்லாத்தையும் அழிச்சுட்டு, கடன்காரன்கிட்டே மாட்டினால், நிச்சயம் நானே பேக்டரியை விற்றுக் கொடுப்பேன். அப்படியும் ஒரு நிலைமை வந்தால் இவளோட எதிர்காலம் என்னாகிறது? அது மட்டுமல்ல. பொறுப்பில்லாத ஒருவன், இந்த வீட்டு மாப்பிள்ளையாய் காலெடுத்து வச்சான். வீடே தரைமட்டமாயிட்டுன்னு ஒரு பழிச்சொல் வந்தால்...''

''இது ஒன் கருத்தா, ஊர்க் கருத்தா?''

''எப்படி வேணுமுன்னாலும் எடுத்துக்கலாம்.''

''ஆக, நான் அம்பத்தூர் பேக்டரியை கட்டிட்டு அழணும் என்கிற.''

''ஆமாம். நீங்க டைப்பிஸ்ட் வேலையை விடணும் என்கிறதுக்காக கேட்கல. அம்பத்தூர் பேக்டரி ஒங்க பொறுப்புல வந்துட்டால், அண்ணன் இஷ்டத்துக்கு பணம் எடுக்க முடியாது. கண்டபடி செலவழிச்சால், நாம் தட்டிக் கேட்போமுன்னு ஒரு பயம் வரும். இதனால அவனும் உருப்படுவான், நாமும் உருப்படுவோம். எல்லாத்துக்கும் மேல, இந்தக் குழந்தையும் உருப்படும். இனிமேல் உங்களைக் கேட்கப்போறதில்ல. சொல்லுங்க. உங்களால குடும்பப் பொறுப்புல கொஞ்சத்தை எடுக்க முடியுமா?''

''சரி எடுத்துத் தொலைச்சிகிறேன்.''

''ஆஹா...எவ்வளவு மங்கலமாய் பேசிட்டிங்க?''

''நான்தான் எப்படியோ சம்மதிச்சுட்டேனே. இன்னும் ஏன் முகத்தைத் திருப்புற.''

பானு, தோளிலேயே தூங்கிய பாமாவை எடுத்துக் கட்டிலில் ஒரு புறமாய் போட்டுவிட்டு, விளக்கை அணைத்து விட்டுப் படுத்தாள். செல்வம், உட்கார்ந்திருப்பதைப் பார்த்துவிட்டு ''தூக்கம் வர்லியா...'' என்றாள்.

''எப்படி வரும்? புதுப் பொறுப்பை எப்படித்தான்...''

''அப்போ ஏதோ சொன்னீங்க. உடம்புல இருபத்தேழு சென்டர் இருக்குது. அதை வசியப்படுத்தினால் எந்த சந்தர்ப்பத்தையும் தாங்கலாமுன்னு.''

''வாஸ்த்தவந்தான். ஆனால் புதுசாய் அம்பத்தூர் பேக்டரி, இருபத்தெட்டாவது சென்டராய் வந்து, எல்லா சென்டரையும் அடைச்சுட்டுது.''

"அப்படியா சேதி, நானும் இருபத்தொன்பதாவது சென்டராய் வாரேன்!"

பானு எழுந்தாள்... கட்டிலில் உட்கார்ந்தவனை நின்ற படியே, தன் மார்போடு சேர்த்து அணைத்தபடியே, அவனருகே உட்கார்ந்திருந்தாள். பிறகு, அவனை வளைத்துப் பிடித்துத் தன் மடியில் கிடத்தியபடியே "தூங்காதே டியர் தூங்காதே, பேக்டரியில் தூங்காதே," என்று தாலாட்டுப் பாடினாள்.

## 9

மறுநாள் காலையில், ஒன்பது மணியளவில், பானுவும், செல்வமும், பாமாவுடன் கீழே இறங்கினார்கள். பாஸ்கரன், மானேஜர் சுந்தரத்துடன் பேசிக்கொண்டிருந்தான். பானு நாற்காலியில் உட்கார்ந்து, அவர்கள் விவாதத்தை உன்னிப் பாகக் கேட்டுக்கொண்டிருந்தாள். பிறகு மானேஜரைப் பார்த்துப் பேசினாள்.

"மிஸ்டர், சுந்தரம் இனிமேல் பேக்டரி நிர்வாகத்தை என் ஹஸ்பெண்ட் கவனிச்சுக்குவார். உங்களுக்கு பாரம் குறைஞ்சுபோச்சு."

மானேஜர், ஆனந்தக் கூச்சலிட்டார்.

"ஒங்களுக்கு எப்படி நன்றி சொல்றதுன்னே தெரிய லம்மா. சாருக்கு என்னோட முழு ஒத்துழைப்பும் உண்டு."

இன்னொரு நாற்காலியில் உட்காரப்போன செல் வத்தை, பாஸ்கரன் பல்லைக் கடித்துப் பார்த்தான். பிறகு சொற்களை, கடித்துக் கடித்துவிட்டான்.

"என்ன மாப்பிள்ளை! சொத்துபத்துக்கு ஆசைப்படாத மாதிரி பேசுனீங்க!"

உட்காரப்போன செல்வம், துணுக்குற்று, அப்படியே நின்றான். பானு, கோபத்தை அடக்கியபடியே குறுக்கிட்டாள்.

"அவரு இப்பவும் ஆசைப்படல. நான்தான் வற்புறுத்தி அவரை சம்மதிக்க வைச்சிட்டிருக்கேன். நீ எதுவும் பேசனுமுன்னால் என்கிட்டே பேசு!"

"இப்போ மூணாவது ஆளுக்கு என்ன அவசரம்? பேக்டரி நல்லாத்தானே நடக்குது."

"பேக்டரி நடக்கிற லட்சணத்தை சுந்தரம் சார் நேற்றே என்கிட்டே சொல்லிட்டார்."

"என்ன சுந்தரம், இது ஒங்க வேலைதானா..."

"சட்டப்படி அம்மாதானே, பேக்டரிக்கு ஓனர். பேக்டரி இதே நிலைமையில் ஓடி, அதை மூடவேண்டிய நிலைமை ஏற்பட்டால், என்மேல...கையாடல் குற்றம் வரப்படாது பாருங்கோ...யார் யாரெல்லமோ எடுக்கிற பணத்துக்கு, நான் பொறுப்பாகக்கூடாது பாருங்கோ..."

"ஓஹோ! நான் ஒரு அவசரத்துக்குப் பணம் எடுத்ததை சொல்லிக் காட்டுறீங்களா..."

முறைத்துப் பார்த்த பாஸ்கரனை, சுந்தரம் பதிலுக்கு முறைத்துவிட்டு, பானுவைப் பார்த்தார். அவள் சமாதானமாகப் பேசினாள்.

"இப்போ, இவர் பேக்டரி நிர்வாகத்தை எடுத்துக்கிறதால குடியா முழுகிடும்? இதுக்குப்போய் எதுக்குக் கத்துறே."

"எப்படியோ போ... ஒன் பேக்டரி, ஒன் இஷ்டம். வீடும் ஒன் பெயருக்குதான் இருக்குது. வேணுமுன்னால் சொல்லு! காலி பண்ணிடுறோம்!"

செல்வம், முதன் முதலாக, பானுமேல், லேசாய் கோபப் பட்டான்.

"இந்த வம்பு வேண்டாமுன்னுதான்...நான் இவள் கிட்டே படிச்சு படிச்சு சொன்னேன். ஒங்களுக்கு உதவி செய்யுறதாய் நெனச்சுத்தான் நான் ஒப்புக்கொண்டேன். உபத்திரவம் செய்யுறதுக்கு இல்ல. ஆளை விடுங்க சாமி!"

"விடாமல் பிடிச்சா வச்சிருக்கேன். நல்லாத்தான் நடிக்கிறீங்க!"

"அண்ணா! என்னைப் பேசு, பொறுத்துக்கிறேன். வேணுமுன்னால் அடி, பட்டுக்கிறேன். இப்படிப்பட்ட பிரதர் இன்லா கிடைச்சதுக்கு நீ கொடுத்து வச்சிருக்கணும். வேறொருவராய் இருந்தால்..."

"சொல்லு ஏன் நிறுத்திட்டே..."

"சொல்லிடுறேன். வேறொருவராய் இருந்தால், நீ ரேஸுக்கு போய் ஆயிரம் ஆயிரமாய் விடுறதுக்கு, ஐயாயிரம் கேள்வி கேட்டிருப்பார்."

"சபாஷ்! நான் ஒன்னை தங்கச்சியா நினைக்கிறேன். நீ என்னை பங்காளியா நினைக்கிற!"

"அப்படி நினைத்திருந்தால், இந்த வீட்ல நேற்று நீ ஆடுன ஆட்டத்துக்கு என்னவெல்லாமோ நடந்திருக்கும்!"

"அந்த அளவுக்கு வந்துட்டியா? மவராசியா ஒன் புருஷனை பேக்டரிக்குப் போகச் சொல் நான் யார் கேட்க!"

"ஏண்ணா பைத்தியம் மாதிரி உளறுறே. ஒன் மைத்துனர் பேக்டரி நிர்வாகியாய் இருந்தால், ஒனக்கும் பெருமைதானே! இதை ஏன் மறந்துடுறே. நாம் ஆயிரம் சண்டை போட்டாலும் அண்ணன் தங்கைன்னு இல்லாமல் போயிடுமா? ஏதோ குத்துபழி வெட்டுபழி நடக்கிறது மாதிரி ஏன் பேசுறே!"

மைதிலி ஈரக் கூந்தலோடு ஓடி வந்தாள்.

"அடடா ஆரம்பிச்சுட்டிங்களா...ஒங்க சண்டையை? ஏன் இப்படி எலியும் பூனையும் மாதிரி நிற்கிறீங்க!"

"நீங்களே சொல்லுங்க அண்ணி! பேக்டரி நிர்வாகத்தை எடுத்துக்கும்படி, இவரை கெஞ்சிக் கூத்தாடி, நான் எப்படியோ சம்மதிக்கவச்சேன். அண்ணன் ஒங்க சொத்து என் சொத்துன்னு பிரிவினை பேசுறாரு. இப்போகூட இந்த நாற்காலியில் உட்கார்ந்து சத்தியமாய் சொல்றேன். அண்ணாவா, சொத்தான்னு ஒரு நிலைமை ஏற்பட்டால் எனக்கு அண்ணன்தான் வேணும்."

செல்வம், குறுக்கிட்டான்.

"டைப்பிஸ்ட் வேலையா, பேக்டரி நிர்வாகமான்னு நீங்க என்னைக் கேட்டிங்கன்னா? நான் டைப்பிஸ்ட் வேலையைத்தான் வேணும்பேன்! என்னைத்தான் யாரும் கேட்க மாட்டேன்றீங்களே! அப்படிக் கேட்டாலும், நான் நடிக்கிறேன்தான். அத்தான் கேட்டாலும்."

மைதிலி, சிறிது நேரம் பேச்சற்று நின்று கணவனை ஓரக்கண்ணால் பார்த்தாள். பிறகு அட்டகாசமாகப் பதிலளித்தாள்.

"ஏங்க, ஒங்களுக்கு ஏன் தடி வார்த்தையாய் வரது? அண்ணன் பேக்டரியை கவனிக்கிறதால, ஒங்களுக்கு என்ன கஷ்டம்? அண்ணனை எதுக்காக நடிக்கிறதாய் சொன்னீங்க? ஒங்க தங்கையை என்ன வேணுமுன்னாலும் பேசுங்க. எங்க அண்ணனை எப்படிப் பேசலாம்? சரி பேசினது போதும்; வர திங்கட்கிழமை பௌர்ணமி நிறைந்த நாள். அன்றைக்கு அண்ணன் பேக்டரில போய் பொறுப்பை எடுத்துக்கணும்... இந்தப் பேச்சும் இதோட நிற்கணும்."

"அதுவரைக்குமாவது... நான் என் டைப்பிஸ்ட் வேலைக்குப் போறேன்!"

"என்ன அண்ணா நீங்க, சின்னப்பிள்ளை மாதிரி பேசறீங்க. நாம் எத்தனையோ பேருக்கு டைபிஸ்ட் வேலை கொடுக்கிற நிலையில் இருக்கோம். ஓங்க ஆபீஸுக்கு போன் போட்டு வேலையை ராஜினாமா செய்துட்டதாய் சொல்லுங்க."

மைதிலி, களைத்துப் போனவள்போல் மூச்சு வாங்கினாள். பானு, செல்வம் வேலையிலிருக்கும் கம்பெனி எண்களை டெலிபோனில் சுழற்றினாள்.

# 10

செல்வம், பேக்டரி நிர்வாகத்தை மேற்கொள்ளப் போவதற்கு முந்திய நாள்—ஞாயிற்றுக்கிழமை.

அவன், ஒரு புத்தகத்தை முடித்துவிட்டு, இன்னொரு புத்தகத்தை எடுத்தான். பானு கேட்டாள்.

"என்ன புக்?"

"'பிஸினஸ் அட்மினிஸ்ட்ரேஷன்'. இதை முடிச்சுட்டு 'லேபர் லா', அப்புறம் 'லேபர் பிராப்ளம்ஸ்'. இன்னைக்குள்ளே படிச்சு முடிச்சுடனும். இப்போ நான் அரை நிர்வாகியாக்கும்."

"இந்த மத்தியான வெயிலுல, எப்படித்தான் ஓங்களால படிக்க முடியுதோ? டார்லிங், பேசாமல் ஒரு பிக்சருக்கு போயிட்டு வர்லாமா?"

"ஈவினிங்ல டி.வியில்தான் பிக்சர் காட்டப்போறாங்களே!"

"இப்போ ஓங்களைக் கூப்பிடுறது சும்மா; சினிமாவுக்காக இல்லே. அது ஒரு சாக்கு. அடுத்த ஞாயிற்றுக்கிழமை, பேக்டரி பிரச்சினையை நெனச்சு மூளையை குழப்பிட்டு

இருந்தாலும் இருக்கலாம். நாளையில் இருந்து எந்த இடத்துல எந்தப் பிரச்னை பற்றி தலையைப் பிச்சுட்டு இருக்கப்போறீங்களோ...இன்றைக்கு மட்டும், ஒரே கதியாய் பிரச்னை இல்லாமல் இருக்கிற இந்த சந்நியாசியோடு சினிமாவுக்குப் போயிட்டு, பீச்சில நாம் வழக்கமாய் உட்காருற அதே இடத்துல உட்கார்ந்து வேர்க்கடலை கொறிச்சுட்டு வரலாமுன்னு அடியாளுக்கு ஒரு ஆசை! போகலாமா சுவாமி!''

''நோ நோ... இந்த புக்கை முடிச்சாகணும்!''

''என்ன ஆர்கூமென்ட்?'' என்று கேட்டபடியே மைதிலி உள்ளே வந்தாள். பானு கோபத்தோடு முறையிட்டாள்.

''பாருங்க அண்ணி, பிக்சருக்குப் போகலாம் என்கிறேன். இவர் என்னடான்னா, புக்லயே பிக்சாகி இருக்கார்.''

அண்ணி, அண்ணனுக்கு புத்தி சொன்னாள்.

''என்னண்ணா நீங்க... பானு ஆசையோடு கூப்பிடுறாள்; இப்படி இருந்தால் யாருக்குத்தான் கோபம் வராது. புறப்படுங்க. ஒங்கண்ணன் காரை எடுத்துட்டுப் போயிட்டாரே... நாளைக்கு மைத்துனர் யூஸ் பண்ணுவாரேன்னு, இன்னைக்கு போகவேண்டிய இடத்துக்கெல்லாம் போயிடுறதுன்னு புறப்பட்டார்.''

பானு, இடைமறித்தாள்.

''என்ன அண்ணி, அண்ணாவுக்கு இல்லாத காரு, இவருக்கு எதுக்கு? கார் அண்ணனுக்குத்தான். இவர் பஸ்லேயே போவார். சரி அண்ணி. இந்த சாமியாரை சினிமாவுக்குப் புறப்படச் சொல்லுங்க!''

''புறப்படுங்க அண்ணா! ஏய் முத்தம்மா, ஒரு ஆட்டோவைக் கூட்டி வாடி!''

''தங்கையின் முகத்தாட்சண்யத்திற்காக, செல்வம் மறு மொழி கூறாமல் புறப்பட்டான். இருவரும் ஆட்டோவில் ஏறினார்கள். அவர்களோடு புறப்படப்போன பாமாவை அடக்கியபடியே, மைதிலி ''டாடா'' காட்டினாள். செல்வம் அவளுக்குத் தெரியாமல், பானுவின் முதுகை கிள்ளினான். அவள் 'எப்பா...' என்று சொன்னபடியே உடம்பை நெளிந்தபோது, ஆட்டோ, பிராண்டல் சத்தத் தோடு பறந்தது.

''எதுக்காக என்னைக் கிள்ளினீங்க!''

''பின்ன என்ன, படிக்கப்போனவனை, மடக்கிப் போட்டுட்டியே! மைதிலியைத் தூண்டிவிட்டு மடக்கிப் பிட்டியே!''

''அதுக்கு இப்படியா கிள்ளறது? என்னம்மா வலிக்குது.''

''ஸாரி!''

''அது இருக்கறதுனாலதான் முதுகு பிழைச்சுது. இல்லன்னா சதை பிஞ்சிட்டுருக்கும்.''

''வேணுமுன்னால் பதிலுக்குக் கிள்ளிடு.''

''சீ... பேச்சைப் பாரு. டிரைவர் ஆட்டோவை ஸ்லோ பண்ணி நாம் பேசுறதை கவனிக்றார் பாருங்கோ!''

இருவரும் திரைப்படத்தைப் பார்த்துவிட்டு, கடற் கரைக்கு வந்தார்கள். வழக்கமாக உட்காரும் இடத்தி லேயே ஒருவர் தோளில் ஒருவர் சாய்ந்தபடியே, பேச்சற்று மனதால் மானசீகமாய் பேசியபடி கிடந்தார்கள். பழைய சல்லாபங்களையும் சர்ச்சைகளையும் தர்க்கங்களையும், தத்துவங்களையும் மனதுக்குள் நிறைவோடு நினைத்து, தத்தமக்குள்ளேயே பேசிக்கொண்டார்கள்.

பானு எழுந்தாள். அவன் பேசாமல் இருப்பதைப் பார்த்துவிட்டு, ''உம் எழுந்திருங்க'' என்றாள்.

அவன் கைகளை நீட்டி, ''நீ என்னைத் தூக்கி நிறுத்து முன்னால நான் எழுந்திருக்கப் போவதில்லை.''

அவள் அவன் கைகளைப்பற்றி தூக்கப்போனாள். முடிய வில்லை. பிறகு, தரதரவென்று அவனைக் கடல் மண்ணில் இழுத்தாள். ''ஒன்னை பதிலுக்கு இழுக்கப்போறேன் பாரு'' என்று சொன்னபடியே அவன் எழுந்து கைகளை நீட்டியபோது, அவன் பிடிக்குள் அகப்படாமல் அவள் ஓடினாள்.

இருவரும் ஜோடியாக நடந்தார்கள்.

''இந்த மாதிரி நம்மால சந்தோஷமாய் இருக்கமுடியுமா சுவாமி!''

''ஏன் ஒனக்கு சந்தேகம் பெண்ணே!''

''ஏதோ அடியாளுக்கு தோன்றிச்சுது கேட்டேன்!''

''அது இருக்கட்டும். வயிற்றில் ஏதும் பலன் தெரியுதா பெண்ணே! சொல்லு டியர். ஏன் பேசாமல் நிற்கிறாய்? இன்றைக்கு பார் என்ன நடக்கப் போகுதுன்னு...''

''நீங்க இப்படிப் பேசுற ஆளுன்னு நினைக்கமாட் டாங்க.''

''பேச்சில் மட்டுந்தானா?''

''சீ...''

இருவரும், இரவு ஒன்பது மணிக்குத்தான் வீட்டிற்குத் திரும்பினார்கள். மைதிலி ''சாப்பாடு ரெடி'' என்றாள். உடனே பானு ''எனக்குப் பசிக்கலே, பால் இருந்தால் கொடுங்க அண்ணி!'' என்றாள். மைதிலி, உள்ளே ஓடிப் போய் பால் கொண்டு வந்தாள். பானு, அதைக் குடித்து விட்டு, கோப்பையை அருகே இருந்த முத்தம்மாவிடம் கொடுத்துவிட்டு மாடிக்கு ஓடிப்போனாள். மைதிலி, யதேச் சையாக, ''என்ன அண்ணா உடம்பு முழுசும் ஒரே மண்ணு'' என்றாள். அவன் உடனே மைதிலியைப்

பார்க்க முடியாமல் பானுவை அர்த்தத்தோடு பார்த்தான். அவளோ நாணப்பட்டு, அங்கே நிற்கமுடியாமல் மாடிப்படிகளைத் தாவினாள். பின்னால் போகப்போன செல்வத்தை, மைதிலி உபசரிப்பால் தடுத்தாள்.

"ஒரேயடியாய் சாப்பிட்டுப் போகலாம் அண்ணா! முத்தம்மா, நீ ஏன் பேச்கு மாதிரி நிற்கிறே! நேரம் ஆகுதுல்ல. வீட்டுக்குப் போடி!"

முத்தம்மா போய்விட்டாள். செல்வம், டைனிங் டேபிளில் உட்கார்ந்தான்.

மைதிலி, முதலில் தட்டைக் கொண்டுவந்தாள். "அப்புறம் டம்ளர், அப்புறம் சாதம், அப்புறம் பொறியல், அப்புறம் சாம்பார்; ஒரேயடியாய் கொண்டு வரலாமே" என்று கேட்கப்போன செல்வம், கடற்கரையில் பானு தன்னை கடல் மண்ணில் இழுத்ததை ரஸித்தபடியே, சொல்ல வந்ததையே மறந்துவிட்டான்.

சாப்பிட்டுவிட்டு, அவன் புறப்படப்போனபோது, மைதிலி மீண்டும் குறுக்கிட்டாள்.

"உட்காருங்க அண்ணா! ஒங்ககிட்டே ஒரு முக்கியமான சமாச்சாரத்தைப் பேசணும். கூடப்பிறந்த அண்ணனிடம் சொல்லாததை ஒங்ககிட்டே சொல்லப்போறேன். நீங்கதான் எனக்கு அண்ணன் மாதிரியில்ல, அண்ணனேதான்! ஒங்க அத்தான், என் வீட்டுக்காரர் இருக்காரே, அவர் வெகுளி; ஆனால் மனசு சுத்தமானது. அதனால அவர் பேசியதை நீங்க தப்பாய் நினைக்கப்படாது. இப்படித்தான் வீட்டுக்கு ஒருநாள் வந்த என் அண்ணனையும்..."

மைதிலி பேசிக்கொண்டே போனாள். கணவன், தன் அண்ணனை அடிக்கப் போனதில் இருந்து, கணவனை அண்ணன் அடிக்கப் போனது வரைக்கும், நேர்முக

வர்ணனை கொடுப்பவள்போல் கொடுத்தாள். செல்வமும் நேரத்தையும் பார்க்காமல், அவள் மனம் திறந்து பேசுவதில் மனம் நெகிழ்ந்துபோனான். அவள் பேசி முடித்துவிட்டு, பெருமூச்சு விட்டபோது பாஸ்கரன் வந்தான். செல்வம் புறப்படப் போனபோது, அவன் குறுக்கிட்டான்.

''உட்காருங்க மாப்பிள்ள! என்ன அவசரம். அத்தான் பேச்சை நீங்க சீரியஸாக எடுத்துக்கப்படாது. இவளை நான் என்ன பேச்செல்லாம் பேசியிருக்கேன் தெரியுமா? அது என்னமோ தெரியல, சின்ன வயசுலேயே நான் தனிக்காட்டு ராஜாவா வளர்ந்துட்டேன். இப்போதாவது பரவாயில்லை. அப்போ நான் பொல்லாத முரடு. ஒரு நிகழ்ச்சி சொல்றேன் கேளுங்க. ஒருநாள் நான் ஸ்கூலுக்கு போய்கிட்டு இருந்த போது ரெளடி மாதிரி ஒருத்தன் வந்தான். வந்து...''

பாஸ்கரன், ரெளடி கதைகளையும், கேடி கதைகளையும், பெண்கள் கதைகளையும், சுவை சுவையாய் சொல்லிக் கொண்டே போனான். அவன் கதைகளை முடித்தபோது, சுவர் கடிகாரம் பத்தை முடித்தது. அப்போதுதான், அவனுக்கு பானு தூங்காமல் காத்திருப்பாள் என்று நினைவுக்கு வந்தது. முன்பும் மைதிலியிடமிருந்தோ மச்சானிடமிருந்தோ புறப்படுவதற்கு கால் மணி நேரம் கடந்துவிட்டால், மாடிப்படியில் அவனுக்குத் தெரியாமலே கண்களுக்குத் தெரியாமல் 'வவ் வவ்வே...' காட்டுவாள். சீக்கிரம் வரும்படி கையை ஆட்டுவாள். முகத்தை கோணுவாள், விழியை உருட்டுவாள். இப்போ கண்களைப் புரட்டினாளோ... வாயைக் கோணலாக்கினாளோ... காலால் தரையை உதைத்தாளோ...

பாஸ்கரன் குதிபோட்டுப் படியேறினான். கதவு திறந்து தான் கிடந்தது. உள்ளே போய் ''பானு, பானு'' என்றான். அவள் மல்லாந்து படுத்துக் கிடந்தாள்.

